# குமரகுருபரன்



மலர் 13]    பிலவ-௵ மாசி-௴ 1ம்-௳    (12-2-62)    [இதழ் 2

தனிப் பிரதி 13 நயா பைசா.    வருடச் சந்தா ரூ. 1¾

## ஆசிரியர் குழு

1. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்,
காசிச் சர்வகலாசாலை, காசி.

2. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி. திருப்பனந்தாள்.

3. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர்
அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக்
கல்லூரி. திருநெல்வேலி.

4. திரு. ஆ. சி. ஷண்முகநயினார் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர், தென்காசி.

5. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
(Verification Officer) இந்து அறநிலைய இலாகா,
20, நுங்கம்பாக்கம் ஹைரோடு. சென்னை – 6.

6. திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.
தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம், காசி.

---

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை

# PRESS & REGISTRATION OF BOOKS ACT.

Registration of Newspapers (Central) Rules, 1956.
FORM IV (SEE RULE 8)
R. No. 1485/57.

## Statement about ownership & other particulars about "KUMARAGURUPARAN" -(Monthly)

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | ...Srivaikuntam |
| 2. | Periodicity of its publication | ...Monthly |
| 3. | Printer's Name | ...Kumaraguruparan Achakam |
| | Nationality | ... |
| | Address | ...Sakattukara Street<br>...Srivaikuntam |
| 4. | Publisher's Name | T. M. Kumaraguruparan Pillai B. A., B. L., |
| | Nationality | ...Indian |
| | Address | PermanentPresident, 'Srivaikuntam Sri Kumaraguruparan Sangam' |
| 5. | Editor's Name | T. M. Kumaraguruparan Pillai B. A., B. L., |
| | Nationality | ...Indian |
| | Address | ...Managing Editor<br>...Srivaikuntam |
| 6. | Names and addresses of individuals who own the newspapers and partners or shareholders holding more than one percent of the total capital | 'Srivaikuntam Sri Kumaraguruparan Sangam'<br>...(Registered under ActXXI of 1860) |

I, T. M. Kumaraguruparan Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

T. M. Kumaraguruparan Pillai B. A., B. L.,
Signature of Publisher.

12—2—1962.

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 13 | பிலவ-ஹூ மாசித் திங்கள் 1-ம்உ [12-2-62] | இதழ் 2

# சிதம்பரச் செய்யுட் கோவை

மாணிக்கவாசக அடிகள்



[ கட்டுரை 54 ]

நினைதல், நினைத்தல் என்னும் தன்வினை பிறவினை இரண்டற்கும் உரிய கருவியை 'நெஞ்சு' என்பர். நினைதலையுடையது என்பதே அதன் பொருள். 'நெஞ்சே நீ நினையாய் நிமிர்புன் சடை நின்மலனை மஞ்சாடும் மலைமங்கை மணாளனை நெஞ்சே நீ நினையாய்' என்பது தமிழ்மறை. இவ்வேத வாக்கியத்தாலும் நெஞ்சின் தொழில் நினைதலும் நினைத்தலும் என்று தெளிவாகும். நினைத்து, நினைந்து, நினைஞ்சு, நெஞ்சு என மருவியது. பாய்த்து என்பது போன்றது நினைத்து.

அந்நினைப்புக் கருவிக்கு உரிய பொருள், கட்டுட்படுத்தும் பொருள் + விடுபயக்கும் பொருள் என்று இருவேறு வகைய

தாகும். கட்டுட்படுத்தும் பொருளை நினைக்கும் நெஞ்சம், அதனின் நீங்கி விடுபயக்கும் பொருளை நினைத்தல் எளியசெயல் அன்று. அரிது என்றலும் போதாது. அரிது அரிது அரிது எனப்பலமுறை கூறலே ஓர் ஆற்ருற் போதுவது ஆகும்.

நெஞ்சிற்குப் பொருள் ஒன்றேயாய் இருப்பின் நன்றேயாம். நினைக்கப்படும் பொருள் பலவாய் இருத்தலால் அவற்றை அடையவும் நுகரவும் விரும்பும் உயிர்க்குத் துன்பமே விளைகின்றது. உயிர்க்குத் துன்ப நாட்டமேயில்லை. இன்பமே குறிக்கோள். குறிக்கோள் இன்பமே ஆயினும் மேற்கோள் பலபொருட் பற்று. அப்பற்றுத் தான் நெஞ்சிற்குப் பலபொருள் நினைவுகளைத் தோற்றுகின்றது. குறிக்கோளாகிய இன்பம் பேரின்பமே ஆயின் அதனை அருளும் முழுமுதற்பொருள் ஒன்றனைமட்டும் நினைக்கும் நெஞ்சம். சிற்றின்பமே நாட்டமாகக் கொண்டு நிற்றலால், அதைப் பெறுதற்கும் இடையற்று நீங்காமல் தொடர்ந்து அது நிற்றற்கும் வேண்டி 'எண்ணுத எண்ணம் எல்லாம் எண்ணி எண்ணி ஏழை நெஞ்சம் புண்ணுகப் போ'கும் பொல்லாங்கு உடையதாகின்றது. ஒரே பொருள் தான் பேரின்பம் நல்கும். மற்றெல்லாப் பொருளும் சிற்றின்பமே யிவன. அவ்வொருபொருளை அன்றி மற்று எப்பொருளை யும் எண்ணுத இனிய பெரிய திருவருட் பழக்கம் நெஞ்சிற்கு உண்டாக்குதல் அறிஞர் கடனுகும்.

"பழக்கம் தவிரப் பழகுவ தன்றி
உழப்புவ தென்பெணே உந்தீபற
ஒருபொரு ளாலேஎன் றுந்தீபற"

என்பது சைவசித்தாந்த ஞானசாத்திரம். இதன் உண்மைப் பொருள் விளக்கம் யாவர்க்கும் இன்றியமையாதது. திருவுந்தியாருரையை நோக்கிப் பலமுறை நினைந்து ஆராய்ந்து கொள்ளல் சால நலந்தரும்.

நெஞ்சோ அப்பொருள் ஒன்றனையே எண்ணிப் பேரின்பம் உறுதற்கு வாய்த்தது. நாமோ அக்கருவியை, அத்தனிப் பெரும் பொருளை மறந்து, உலகப் பொருள்களையே எண்ணிப் பெருந் துன்பம் உறும் நெறியில் ஆள்கின்ருேம்.

நெஞ்சமும், அதன் வழிச்செல்லும் பொறிகளும், அவை கொள்ளும் புலன்களும் ஆகிய கருவிகளை அழியாத பரம் பொருள் ஒன்றனையே குறிக்கோளாகக் கொண்டு பயன்படுத்தும் நெறியே உயிர்க்கு உற்ற பழைய நெறி. அந்நெறிதான் அருள்நெறி. அதற்கு வேறான எந்நெறியும் புன்னெறியே அன்றி நன்னெறியாகாது. புல்நெறியோ உயிர்க்குப் புல்லும் நெறி அன்று. புல்லிய நெறியே. புல்லிய காலமோ தெரியாது. பலபிறவியாகப் புல்லிய பழைய நெறி. உயிர்கள் புல்லிய புன்மை நெறி இயல்பாகாது. இன்பமே உருவாகும் இறைவன் உயிர்க்கு உயிராய் என்றும் நீங்காதவன்; உயிரை என்றும் நீங்காது உள்ளிருந்து தன்னை நுகரவழி காட்டிவரும் அவ்விறைவனை நினையாமல், வெளியிலிருக்கும் அழிபொருள்களையே எண்ணி, அவற்றால் கட்டு உற்றும் அதனால் துன்பம் எய்தியும் மேலும் மேலும் வினைக்கு ஆளாகும் புன்மையால், 'புன்னெறி' எனப்பட்டது. இறைவனையே எண்ணி என்றும் நன்றான இன்பமே எய்தும் நெறி, 'நன்னெறி' எனப்பட்டது. அதுதான் 'ஞானமார்க்கம்' எனப்படுகின்றது. படவே, 'புன்னெறி' எல்லாம் அஞ்ஞான மார்க்கம் என்பது தானே தெரியும். உயிர்க்கு நன்னெறிப் படர்ச்சியே இயற்கை. புன்னெறிப் படர்ச்சி செயற்கையே ஆகும். தன்னுள் இடைவிடாது இருக்கும் இறையின்பம் பெறநாட்டம் இன்றி, உலகில் உழலும்படி செய்யும் இறையின்பம் (சிற்றின்பம்) பெறநாடும் செய்கை எவ்வாற்றானும் இயற்கை ஆகாது. அச்செய்கை செயற்கையே. செயற்கை பின்னது. இயற்கை முன்னது. உயிர்ச் செய்கை புன்னெறிச் செலவு, உயிரியற்கை நன்னெறிச் செலவு. செயற்கையை மாற்றலாம். இயற்கையை மாற்றலாகாது. மாற்றலரிது. செயற்கையை மாற்றலாம் என்னும் துணிவால்தான் ஆண்டவன்பாற் பற்று வைத்து வேண்டிக் கொள்ளும் ஒருநிலை ஏற்பட்டது. அந்நிலையில் வேண்டி, இயற்கையை எய்தியவருள் ஒருவராகிய கச்சியப்ப சிவாசாரியார்,

"புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலாம்
நன்னெறி ஒழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
என்னையும் அடிய னாக்கி இருவினை நீக்கி ஆண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங் கயங்கள் போற்றி."

என்று மெய்ப்பொருளை வணங்கினர். இதிற்குறித்த இருவேறு நெறியுள், இயற்கை நெறியான நன்னெறியில் சென்ற உயிர் செயற்கை நெறியில் செல்வது முன்னெறியின் மாறியதாகும். அதனால்தான் நம் ஆசிரியப் பெருமக்கள், அம்மாற்றத்தைக் குறித்து நிறையப் பாடியருளினர்கள்.

'மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப் புலன் ஐந்தின் வழி' என்று புன்னெறியின் போக்கு இயற்கையன்று. அது மாறிய பின்நெறியே; இயற்கைநெறி அதன் முன்னதே ஆகும் எனக்குறித்த மணிவாசகத்தை அறியாதார் உளரோ? அவ்வழியை அடைத்துச் செல்வதே இயற்கை என்னும் நன் னெறியாகும். நெறியும், அந்நெறியில் செல்லும் செலவும், சென்று அடையும் எத்துறையும் இயைபுடையன வாயிருத்தல் வேண்டும். புன்னெறியும், அந்நெறிச் செலவும், அச்செலவால் அடையும் (துன்பத்) துறையும், உடைய இயைபு பெருந்துன்பத் திற்கே ஏதுவாகும். நன்னெறியும், நன்னெறிச்செலவும், நன் னெறியிற் சென்று அடையும் துறையும் பேரின்பத்திற்கே ஏதுவாகும். ஆதலால் தான், அந்நன்னெறியை உபதேசித் தருளத் தோன்றியவர்களை உயிர்கள் போற்றின. இன்றும் போற்றுகின்றன. என்றும் போற்றும். இப்பெருமை எக் கருமையாலும் அழியாது. வரவரக் கருமைக்கும் இப்பெருமை புலனாகிக் கொண்டிருக்கிறது. ஏன்? இயற்கை எய்திவருதல் கருமையின் பழக்கம் ஆயிற்றன்றோ? செயற்கையினின்று இயற்கைக்கு மாறுதல் வியப்பூட்டாது. தண்ணீர் ஓடும் நெறியை மாற்ற வேண்டி மடைமாற்றுதல் போல, நெஞ்சத் தின் நினைவு ஓடும் புன்னெறியை மாற்றி நன்னெறியில் நினைவு ஓடும்படி செய்தல் வேண்டும். அதற்குள்ள மடையை மாற்றித் தான் ஆதல் வேண்டும். அம்மடைதான் என்ன? புன்னெறி யில் நடப்பது மலநடை. நன்னெறியில் ஒழுகுவது அருள் நடை. அவ்விருநடையுள் மலநடையை மாற்றி அருள்நடை யாக்குவதே நன்னெறியொழுக்கத்திற்கு உரியமடைமாற்றம் ஆகும்.

தாயுமானவர் 'தெட்டிலே வலிய மடமாதர் வாய் வெட்டிலே' என்னும் (மலைவளர் காதலி வணக்கத்திலே) பாட்டிலே இம்மடை மாற்றம் குறித்தருளினர். மடையை

வழியடை என்றும் கூறலாம். ஆயினும் இரண்டும் பொருள் வேறுபாடுடையவை. வழியடையெல்லாம் மடையாகலாம். மடையெல்லாம் வழியடையாகா. ஒரு வழியை அடைத்து வேறு வழியைக் காட்டுவதே மடை. வேறு வழியிற்போக்காமல் உள்ள ஒரு வழியையும் அடைப்பதே வழியடை.

'வீழ்நாள் படாஅமை நன்ருற்றின் அஃதொருவன்
வாழ்நாள் **வழியடைக்குங் கல்.**'

என்பதன் உரையில், 'யாக்கையொடு கூடும் நாள் வரும் வழியை வாராமல் அடைக்கும் கல்லாம்' என்ற பரிமேலழகர் கருத்தை நோக்குக.

'அறம்தெரி திகிரிக்கு வழியடை யாகும் தீது' என்னும் பதிற்றுப்பத்துச் சொற்ருெடரும் ஈண்டுக் கருதற்பாலது. அத்'தீது' சினத்தையும் காமத்தையும் கழிகண்ணேட்டத்தையும் குறித்து நின்றதென்ருர் அவ்வுரையாசிரியர். (குறள் - 432.) அதனுல், அவற்றை வாராமல் அடைப்பதே வேண்டுவது. அத்தீது அறம் தெரிதிகிரிக்கு வழியடையாகும். திகிரிக்கு வழியடையாயின், திகிரி வேறு வழிப்போக்குருது. இங்கு வழியடை என்றது மடைமாற்றத்தின் முதற்ருெழிலில் அடங்கும். இரண்டாவது தொழில் வேற்று வழியில் ஏகச் செய்வது.

மலநடையைத்தடுப்பது வழியடை. அருள்நடையைத் தொடுப்பது வழியடைக்கு இல்லை. இரண்டும் 'மடைமாற்றம்' என்பதன் இரு வேறு தொழிலேயும் முறையே சாரும்.

'குலவுவைவேற் படைமாறு கொண்டமைக் கண்ணியர் பால்வைத்த பாசநெஞ்சை மடைமாறி நின்றன் திருவடிக்கே வர வைத்தருளே' என்று பாடிய மணவாள வாக்கு இங்கு நினைக்கத்தக்கது.

'மலநடை' 'அருள்நடை' என்னும் வழக்கு, சைவசித்தாந்த ஞான நூல் வழக்கு. ஞானியருலகவழக்கும் ஆம். மலநடையே ஓயாதவர் அருள் நடையை அறிவதும் அடைவதும் உண்டோ?

தில்லேச்சிதம்பரத்துச் சென்று, அங்கு அடியரை உய்யக் கொள்ள ஆண்டவன் திருக்கூத்தாடும் அருட் செயலேக் கண்டு,

வணங்க வந்த அன்பனை, 'என்று வந்தாய்? இங்குவரும் முன்னர் நீ உவந்த நாள் உண்டோ? என்று உவந்தாய்?' என இவ்வாறு வினவியருளும் திருக்குறிப்பை உணர்த்தும் அபயகர மலரைக் கண்ணுரநோக்கி, அவனது கருணைபொழியும் திரு நோக்கால் கனியாத (உருகாத) கல் நெஞ்சம் காரிகையார் காமஞ்சான்ற கடைக்கண்ணேக்கால் கரைந்துருகுகின்றது. இது மாவும் மாக்களும் மக்களும் அறியும் உண்மை. இங்கு உள்ளம் (அகம்) வாய்க்கால். உள்ளுதல் அக் கால்வாயில் ஓடும் நீர். அதன் ஓட்டம் உள்ளம் கரைந்துருகும் உருக்கம் ஒக்கும். உள்ளுதல் ஆகிய நீர் புலனெறியிற் போகின்றது. அதை அருள் நெறியிற் போக்குதல் வேண்டும். அது குறித்து மடையை மாற்றுதல் இன்றியமையாத செயல். நெஞ்சம் காமமார்க்கத்து நினைப்புடையதாய்க் காரிகையார் மாட்டுக் கரைந்துருகுகின்றது. அது அவ்வஞ்சம் தீர்ந்து காமாரிமார்க்கத்து நினைப்புடையதாகி அக்கனகசபேசன் கருணைத் திருநோக்கினல் கனிந்து கரைந் துருக வேண்டும். காமமார்க்க சஞ்சாரத்தை மாற்றிக் காமாரி மார்க்க சஞ்சாரத்தை நெஞ்சத்தின் நினைப்புக்கு ஆக்குவதே இங்கு மல நடை (புன்னெறிநடை)யை மாற்றி அருள் (நன்னெறி)நடையை மேற்கொண்டதாகும். அதுவே தீவினையில்லாத தெய்வச்செலவு. அதை நம் குமரகுருபர முனிவ்ரர் அருளிய இத்திருப்பாடல் உணர்த்தும் அழகினைப் புலவரே கண்டு இன்புற வல்லாராவர்.

சேல்செய்த மதர்வேற்கட் சிலைசெய்த சுடிகைநுதல்
மால்செய்த குழற்கோதை மகிழ்செய்ய நடஞ்செய்யும்
தருணவிளம் பிறைக்கண்ணித் தாழ்சடையெம் பெருமானின்
கருணைபொழி திருநோக்கிற் கனியாத கன்னெஞ்சம்
வாமஞ்சான் மணிக்கொங்கைக் கொசிந்தொல்கு மருங்குலவர்
காமஞ்சால் கடைநோக்கிற் கரைந்துருகா நிற்குமால்
அவ்வண்ண மாறிநிற்ப தகமென்று லகமகம்விட்
டெவ்வண்ண மாறிநிற்ப தின்று.

குறிப்பு:- சேல் போலும் கண், மதர்க்கண், வேற்கண். சிலை(-வில்) போன்ற நுதல். சுடிகை - சுட்டி அணி. மால் - அன்பு. குழல் - கூந்தல். கோதை - சிவகாமவல்லித் தாயார். மகிழ்செய்ய - உவக்க. கண்ணையும் நெற்றியையும் கூந்தலையும்

உடைய அம்மையார் திருவிழி யாற்கண்டு பெருமகிழ்வுற்றுப் பிள்ளைகளாகிய உயிர்களை வாழ்வித்தருளத் திருநடம்புரியும் பெருமான். இளம் பிறைக்கண்ணியைச் சூடிய முதுபெருஞ்சடை யுடைய பெருமான். பெருமானது திருநோக்கு. கருணையே பொழியும் திருநோக்கு. அத்திருநோக்கால் கனியாத நெஞ்சம் கல்நெஞ்சம். வாமம்-அழகு. கொங்கைச் சுமைக்கு ஆற்றுமல் ஒசியும் இடை. மருங்குலவர், இடையினர். இடையர் எனலாமோ? அவரது நோக்கு, காமஞ்சால்விக்கும் கடைநோக்கே. அவர் கடைக் கண்ணுேக்கே காமஞ்சால்விக்கும் ஆயின், முழுக் கண்ணுேக்கத்தால், தம் பெருந்தகைமைக்கு ஒரே முழுக்குப் போடாதார் யார்? 'சிவ சிவ' யாவரேயோ அவர் திறத்து அகப் படாதார்,? பெருமான் திருநோக்கிற்கனியாத கல்நெஞ்சம் மருங் குலவர் காம நோக்கிற் கரைந்துருகா நிற்கும். அவ்வண்ணம் மாறி நிற்பது அகம் (மனம்; பாவம்). அவ்வகம் (உள்ளம்) அவ்வக(பாவ)த்தை விட்டு மாறி நிற்பது எவ்வண்ணம்? (ஒரு போதும் இல்லை). இன்று எவ்வண்ணம் மாறிநிற்பது? தொன்று தொட்டுள்ளபழக்கம் இன்றுமாறுமோ? மாறுவதரிதே.

(தொடரும்)


திருமந்திரமாலை எனப் பெயர் பெற்ற

★ திருமந்திரம் ★

புதிய பதிப்பு

சார்வரி வருஷ ஆவணி மூல வெளியீடு

588 பக்கங்கள் உயர்ந்தரக வெள்ளைத்தாள் பிரதி ரூ. 2-25
முன் விலை ரூ. 2-50

ஒரேசமயத்தில் 20 பிரதிகளுக்கு மேல் வாங்குவோருக்கு 20% கமிஷன்

கிடைக்குமிடங்கள் :-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில்,
ஸ்ரீவைகுண்டம். (திருநெல்வேலி ஜில்லா)

2. "தியாகராஜ விலாசம்"
53, பிள்ளையார் கோயில் தெரு; திருவல்லிக்கேணி, சென்னை-5

# கூத்தப்பெருமானும் குமரகுருபரரும்



திரு. A. C. சண்முகநயினர் அவர்கள் பி. ஏ. பி. எல்.
திருக்குற்றால தேவஸ்தான தர்மகர்த்தர் குழு முன்னுள் தலைவர்,
தென்காசி.

மலர் 13, இதழ் 1-பக்கம் 32-ன் தொடர்ச்சி.



**கூ**த்தப் பெருமானின் திரு உருவம் கலையின் சிகரம். கற்பனை கடந்த ஜோதி. அறிவின் முடிவு. அழகின் எல்லை. கருணையின் வடிவம். அற்புதக்கோலம். இந்தத்திரு உருவத்தை வியக்காதார் எந்த நாட்டிலுமில்லை. வியக்குந்தொறும் வியக்குந் தொறும் வியப்பிறந்தே நிற்கின்றது இவ்வுருவம். விக்ரக வழி பாட்டை மதிக்காத பிறமதஸ்தர்களும், அயல் நாட்டார்களும் இந்தத் திருஉருவத்தை மிகவும் பாராட்டுகின்றூர்கள். இதின் அழகு அவர்களைக் கவர்ந்து விட்டது. ஜெர்மனி, இங்கிலாந்து அமெரிக்கா முதலிய நாடுகளில் இந்தத் திருஉருவத்தை பொருட் காட்சிச்சாலையில் வைத்துக் கலைக்கண்ணேடு பார்த்துப் பரவச மடைகின்றூர்கள்.

ரொமெயின் ரோலண்டு என்னும் பிரான்ஸ்தேசத்து ஞானி இவ்வாறு கூறுகின்றூர். "எல்லாம் ஒன்றுபடும் தன்மைக்கு இது ஒர் அழகான எடுத்துக் காட்டு. ஜீவியத்தின் சக்திகளை ஒன்றுகக்கூட்டி அவைகளின் சலனங்களையெல்லாம் நடராஜரே தலைமையாயிருந்து நடத்தி வருகின்றூர். ஒவ்வொன்றும் அதனதன் இடத்தில் அமைந்து ஒவ்வொரு தொழில் புரிகின்றது. எல்லாம் இந்தத் தெய்விக ஆட்டத்தில் பங்குபெறுகின்றன. அவற்றின் பலபல ஒலிகளும் ஒன்றுக்கொன்று மாறுபட்டாலும் மிகவும் அநுபவிக்கத் தக்க ஓர் அழகான இசையை உண்டாக்கு கின்றது." "Nataraja is an example of supreme synthesis. All is harmonised. All the forces of life are grouped like a forest, whose thousand waving

arms are led by Nataraja, the master of dance. Every thing has its place, every being has its function and all take part in the divine concert, their different voices and their very dissonances creating............a most beautiful harmony''.

ஆசிரியர் வில்லியம் ரோதன்ஸ்டெயின் ''செம்புவிக்ரகமாகிய நடராஜரின் முகபாவத்தின் அழகையும் உடற்பொலிவையும் ஒரு சீன தேசக் கலைஞனும் விஞ்சிவிடவில்லை'' என்று புகழ்கிறார். பிரான்ஸ்தேசத்துப் பெருஞ்சிற்பி அகஸ்தா ரோடின் என்பார் இந்தியநாட்டு நடராஜ உருவம் இத்தாலிய நாட்டு ''வீனஸ்-டி-மெடிச்சி'' உருவத்துடன் அழகில் போட்டியிடலாம். ஆனால் இத்தாலிய விக்ரகம் தன் கரங்களின் அழகால் மகிழ்விக்கின்றது இவன் ஒரு சாமர்த்திய சலுகையால் மயக்குகின்றான்'' என்று கூறுகின்றார்.

கல்கத்தாவிலுள்ள ஓர் கலைஞர் '' நடராஜமூர்த்தியின் செம்பு விக்ரகங்களே இந்தியரின் கலைஞானத்திற்கு அமெரிக்கா ஐரோப்பா நாடுகளில் புகழ் வாங்கிக் கொடுத்தன. இதனால் மேல் நாட்டுக் கலைவிற்பன்னர்கள் இந்தியக் கலையின் தன்மையையும் பொருளையும் வியக்கின்றனர். கலைநுணுக்கங்களுடன் தத்துவநுணுக்கங்களையுங் கலந்து தத்துவப் பொருள்களுக்கு விளக்கங் கொடுப்பதால் அவை அறிவதும் புகழ்வதும் பண்டைய கிரேக்க விக்ரகங்களிலாவது அல்லது கி. பி. 14–16 நூற்றாண்டுகளில் மறுமலர்ச்சிக் காலத்திலுள்ள விக்ரகங்களிலாவது காணமுடியாத ஓர் புதிய கலையின் கற்பனை உலகிற்கு அழைத்துக் கொண்டு போவதாகும்'' என்று வியக்கின்றார். கலையுலகில் நடராஜ சிவத்தின் உருவம் மிக மிக மேலான சிற்பம் என்று ஜிதேந்திரநாத பேனர்ஜி அவர்கள் எழுதுகின்றார்கள்.

குமரகுருபரர் சிதம்பரமும்மணிக் கோவையின் 2-வதுபாட்டில்

''பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்.... .... ... பேரின்பம்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே''

நடராஜ மூர்த்தியின் திருஉருவத்திலுள்ள திருக்கரங்கள் திருவடிகளைக் கூறி அவை செய்யும் ஐந்தொழில்களையும் கூறு

கின்றூர். (பாட்டு 28வது பக்கம் 1ம் இதழ் உள்ளது) "இருபெருஞ் சுடரும் ஒரு பெரும் புருடனும் - ஐவகைப் பூதமோடெண்வகை யுறுப்பு சூரியன் சந்திரன் இயமானன் ஐம்பூதங்கள் .இவை யெட்டும் இறைவன் திருஉருவம். அப்பர் சுவாமிகளும் இக் கருத்தையே தாம் அருளிய தேவாரத்தில் வெளியிடுகின்றூர். "இருநிலனுய்த் தீயாகி நீருமாகி இயமானனுய் எறியுங் காற்று மாகி – அருநிலைய திங்களாய் ஞாயிருகி யாகாசமாய் அட்ட மூர்த்தியாகி" என்ற திருப்பாட்டுடன் ஒப்பிட்டுப்பார்க்க இனிமை தரும். இன்னும், குமரகுருபரர் நடராஜமூர்த்தியின் திருஉருவம் "ஓமெனு மெழுத்தின் வடிவம்" என்றும், திரு ஐந்தெழுத்தின் ஒலியுருவமும் பொருளும் நடராஜப் பெருமான் என்றும் பாடுகின்றூர்.

"சத்தமுமாகியச் சத்தத்தாற் பெறும் அத்தமுமாகலின் அனந்தன்
கண்களே–உத்தமனைந் தெழுத்துருவங் காண்பன"

சத்தம் - ஐந்தெழுத்தின் ஒலி. அத்தம் - அதன் பொருள், அனந்தன் - ஆதிசேடன் அவதாரமாகிய பதஞ்சலி முனிவர்.

திருஉருவ விளக்கம் "உண்மை விளக்கத்தில்" இவ்வாறு வருகின்றது.

"ஆடும் படிகேள்நல் லம்பலத்தா னையனே
நாடுந் திருவடியி லேநகரம் – கூடும்
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்"

"சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் – பார்க்கிலிறைக்(கு)
அங்கி நகர மடிக்கீழ் முயலகனூர்
தங்கு மகரமது தான்".

இங்கே,

"ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடும்
ஆகின்ற நாபியுள் அங்கேம காரமாம்
ஆகின்ற சீயிருதோள் வவ்வாய்க் கண்டபின்
ஆகின்ற வச்சுடர் யவ்வியல் பாமே".

என்ற திருமந்திரப்பாட்டும் குறிப்பிடத் தக்கது.

நடராஜப்பெருமான் தென்திசைநோக்கி ஆடுவது அத் திசைத் தலைவனாகிய யமனைத் தம் திருவடியால் உதைத்து அடக்கும் நோக்குடையது.

"பிடிப்பது மக்கெனவேண்டின் வெங்கூற்றெனும் பேர்முடிய
முடிப்பது மத்தமுடியார்க்கு வேண்டுமுக் கட்பரனார்
அடிப்பது மத்தொன்றெடுத்துத் தென்பான்முக மாகநின்று
நடிப்பது மத்தன்மையா நமனாரிது நாடுமினே'.

மெய்ப்பொருள் விரும்புவோர் உலகப்பற்றுக்களை விட்டுக் குஞ்சிதபதத்தைக் கும்பிட ஆர்வங் கொள்வர். ஏனெனில்அதைக் கும்பிடுதலே வீட்டின்பத்திற்குஞ் சிறந்ததாகக் கொள்வர்.

ஆகையால்

"போற்றுமின் போற்றுமின் போற்றுமின் போற்றுமின்
கூற்றங்குமைக்க வருமுன் னமரங்காள்
ஏற்றுவந்தான் பொற்றா ளிணை."

கூற்றுவன் வருத்துமுன், நம்மவர்களே! இடபவாகனத்தில் ஏறி எழுந்தருளும் பெம்மான் பொற்றாளிணையைப் போற்றுங்கள் என்று வற்புறுத்துகின்றார்.

காரைக்காலம்மையார் இறைவன் திரு உருவம் எது என்றறியாமல் கவலைப்பட்டார். தேடித்தேடியுங் காணவில்லை.

"அன்றுந் திருஉருவம் காணாதே ஆட்பட்டேன்
இன்றுந் திருஉருவங் காண்கிலேன்—என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவ மேது?"

ஏதொக்கும் ஏதொவ்வாது ஏதுஆகும் ஏது ஆகாது என்பதனை யாரறிவார்? என்றெல்லாம் புலம்பினார். பின் திரு உருவத்தின் பொலிவைக் கண்டார்.

"காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு—மாலையின்
றாங்குருவே போலுஞ் சடைக்கற்றை மற்றவற்கு
வீங்கிருளே போலும் மிடறு."

என்று பாடிப் புளகாங்கிதமானார்.

அவ்வாறே அப்பர் சுவாமிகளும் கவலைப்பட்டார்.

"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான்
வார்சடையான் என்னி னல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன் ஓரூர
னல்லன்ஓ ருவம னில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே
கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன்
என்றெழுதிக் காட்டொ ணாதே."

கயிலாயத்திற்குப் புறப்பட்டார் இறைவனைத் தேடி உடம்பு தேய்ந்தும் இறைவனைக் காணும் ஆசை தேயவில்லை இடைவழியில் அவனருளைப் பெற்றார். சுனையில் மூழ்கினார். திருவையாற்றில் "கண்டேனவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்" என்று உருகினார். இம்மட்டோ. இறைவனை ஓர் அழகிய ஓவியமாகவும் வரைந்து காட்டினார்.

"குனித்தபுருவமுங் கோவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்தசடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்தமா நிலத்தே."

இத்துடன் நின்றாரா அவர்? இல்லை. எடுத்த பொற்பாதத்தைத் தொழுது அப்பாதமுடையாருடன் பேசவும் தலைப்பட்டு விட்டார். தில்லைச்சிற்றம்பலத்துள் நட்டம் பயில்வது "என்றுவந்தாய் என்னும் எம்பெருமான் திருக்குறிப்பே" என்று தன் அனுபவத்தை நமக்கு உபதேசித்தருள்கின்றார்.

குமரகுருபரரும் நாரிபாகனாகிய இறைவனைக் காண்கிறார். அவன் உடம்பில் ஒரு பாகம் சிவபெருமான். மற்றொருபாகம் உமாதேவி." இவ்வுருவத்தை எப்படியழைப்பது. இருவருக்கும் உரு ஒன்று! ஒருவன் என்றால் உமாதேவிக்காகாது. ஒருத்தியென்றால் சிவபெருமானுக்காகாது. ஆகையால் இருவருக்கும் பொருந்து முறையில் ஒருவர் என்று சொல்கின்றார். இப்படிச் சொல்வதால் இறைவனை என்ன சொல்லிப் புகழ்வது என்ற கவலையும் நீங்கிற்று.

"அருவருக்கு முலகவாழ் வடங்க நீத்தோர்க்
கானந்தப் பெருவாழ்வா மாடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் றீநீர்
மண்ணெனுமெண் வகையுறுப்பின் வடிவுகொண்ட
ஒருவனுக்கு மொருத்திக்கு முருவொன் றுலவ்
வுருவை யிஃதொருத்த னென்கோ வொருத்தி யென்கோ
இருவருக்கு முரித்தாவொருவ ரென்றோர்
இயற்சொலில தெனின்யான்மற் றென்சொல் கேனே".

இப்பாட்டில் எத்தனே பொருள்கள் நிரம்பிக் கிடக்கின்றன?

உலக வாழ்வு அருவருப்பையே குணமாகவுடையது. அவ் வாழ்வை அடக்க வேண்டும். அடக்கியவர் நீத்தார். அவர் களுக்குப் பெருவாழ்வுகிட்டும். பெருவாழ்வு என்பது வீடு பேறு. அதுமட்டுமல்ல. ஆனந்தப்பெரு வாழ்வு கிடைக்கும். அதுதான் இறைவன் ஆடல் காண்பதின் இன்பம். இந்த இன்பத்தைவிட வீடுபேறு மேலானதல்ல. இறைவன் அட்ட மூர்த்தியாயிருக்கின்ருன். எல்லாப் பொருள்களும் அவனே. அவனன்றி ஒருபொருளும் இயங்காது. சூரியசந்திரர் நமக்குப் பொருளேக் காட்டும் ஒளியுடையதாயினும் அவ்வொளியை இறை வனிடமிருந்து பெற்றே நமக்கு ஒளிதருகின்றன.

இறைவன் திரு உருவப் பெருமையைக்கூற வந்த குமர குருபரர் நகைச்சுவையும் சற்றே கலந்து கூறுகின்ருர்.

'வேதண்ட மேபுயங்கள் விண்ணே திருமேனி
மூதண்ட கூடமே மோலியாம் - கோதண்டம்
ஒற்றைமா மேரு வுமாபதியார் நின்ருடப்
பற்றுமோ சிற்றம் பலம்"

மலேகளேப் புயங்களாயும் ஆகாயத்தைத் திருமேனியாகவும் அண்ட முகடுகளேத் திருமுடியாகவும் மேருமலேயை வில்லாகவும் உடைய உமாபதியாயர் ஆடுதற்கு இச்சிறிய அம்பலம் போதுமோ? இது சிற்றம்பலமாகலின் பேரம்பலம் ஒன்றுண் டென்பது தெளிவு. திருத்தொண்டர்களே மறக்கவில்லே. அவர்கள் செய்யும் பேருதவியைப் புகழ்ந்து அவர்களே அண்டினவர் எல்லாப் பேறும் பெறுவர். பெறத்தகாதது ஒன்றுமில்லே என்று அவர்களுக்கு நன்றி கூறுகின்ருர் குமரகுருபரர்.

"புல்லறிவகற்றி நல்லறிவு கொளீஇ
எம்மனோரையு மீடித்து வரைநிறுத்திச்
செம்மை செய்தருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க் குண்டோ பெறத்தகாதனவே"

இவ்விடத்தில் மாணிக்கவாசகசுவாமிகளும் தான் அடியவர் கூட்டத்தில் இருக்கவேண்டுமென்று பாடுவதை ஞாபகப் படுத்திக் கொள்ளலாம்.

"உடையாளுன் தன்நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானல் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே".

சிவனடியார்கள் பெருமையின் அளவை இவ்விரு சுவாமிகளின் வாக்குகள் விளக்குகின்றன.

சிவனடியார்களுக்கு நன்றி கூறுவதும் அவர்கள் செயலைப் புகழ்வதுமட்டுமின்றி அவர்கள் உறவே தனக்கு உயிர்நீங்கும் வரை வேண்டுமென்று தில்லை வாணனை வேண்டுகின்ருர். குமரகுருபரசுவாமிகள்,

".... ... .... .... தில்லைவாண
வரமொன்றிங் கெனக் கருளல்வேண்டும் அதுவே
.... .... .... .... ....
.... .... ... ... நாளுளும்
ஒழுக்க நிறைந்த விழுப்பெருங் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைகவித்திறம்
உடனீங்களவு முதவிக்கடவுணின்
பெரும்பத மன்றயான் பிறிதொன்
றிரந்தனன் வேண்டினு மீந்திடாததுவே".

———

(வளரும்)

# மதுரைக் கலம்பகம் உரைநடை

தருமபுர ஆதீன வித்துவான்,
"திருவண்ணுமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

[மலர் 13. இதழ் 1-ன் தொடர்ச்சி]

நகையே யமையுமிந்த நாகரிக நோக்கு
மிகையே யனங்கன் வினைகொளல்வீ ணன்றே
தகையே மதுரேசன் தண்டமிழ்நா டன்னீர்
பகையே துமக்கு நமக்கும் பகர்வீரே. 41

மதுரையம் பதிக்குத் தலைவனாகிய சொக்கேசப் பெருமானது குளிர்ந்த தமிழ் வழங்குகின்ற கன்னிநாடு போலச் சிறந்தவரே! என்னைக் கொல்வதற்கு உமது புன்முறுவல் ஒன்றே போதும். சாமர்த்திய முள்ள இந்தப் பார்வை மிகுதியானதேயாகும். இதற்கு மேலும் மன்மதன் போர்த்தொழிலை மேற்கொள்ளுவது வீணாகுமல்லவா? இங்ஙனம் என்னைத் துன்புறுத்துதல் உமக்குத் தகுதியாகுமா? உமக்கும் நமக்கும் பகைமை யாது உளது? சொல்லுவீராக.

வீரம் வைத்தவில் வேள்கணை மெய்த்தன
பாரம் வைத்த பசும்புண் பசும்புணே
ஈரம் வைத்த விளமதி வெண்ணிலாக்
காரம் வைத்த கடம்ப வனேசனே. 42

குளிர்ச்சி தங்கிய பிறைத்திங்களினது வெண்மையான நிலாவாகிய காரத்தை எனக்காகப் படைத்து வைத்திருக்கின்ற கடம்பவன நாதனாகிய சொக்கேசப் பெருமானே! வீரம் மிகுந்த

வில்வல்லாளுகிய மன்மதன் தனது அம்புகளை எனது உடம்பி லுள்ள பருத்த கொங்கைகளின் மேல் பாயவைத்ததனுலுண் டாகிய பச்சைப்புண் எப்பொழுதும் பச்சைப்புண்ணுகவே இருந்து கொண்டிருக்கின்றது.

கடங்கால் பொருப்பொன் றிடும்போர்வை சுற்றுங்
கடம்பா டவிச்சுந் தரரேநுந்
தடந்தோள் குறித்திங் கணைந்தே மெனிற்பின்
தரும்பே றுன்மத்தின் பெருவாழ்வோ
தொடர்ந்தே யுடற்றிந் திரன்சா பமுற்றுந்
துரந்தா லுமிப்பெண் பழிப்போமோ
அடைந்தேம் விடக்கொன் றையந்தா ரெவர்க்கென்
றமைந்தே கிடக்கின் றதுதானே. 43

மதநீரைப் பொழிகின்ற மலைபோன்ற தொரு யானை தந்த தோலாகிய போர்வையை உடம்பிலே சுற்றியணிந்த கடம்ப வனத்திலே எழுந்தருளியுள்ள அழகரே! உமது பருத்த திருத் தோள்களைச் சேரவேண்டி உம்மை நாடி இங்கு வந்தோமானுல் எமக்கு நீர் தரும்பேறு பைத்தியம் ஆகிய பெரு வாழ்வு தானு? விடாது பின்தொடர்ந்து துன்புறுத்திய இந்திரனது பிரமகத்தி தோடமுழுவதையும் நீர் நீக்கினுலும் இந்தப் பெண் கொலையால் வருகின்ற பழி உம்மை விட்டு நீங்குமா? உம்மை நாடி அடைந்த வர்களாகிய எங்களைவிட உமது அழகிய கொன்றைப் பூமாலை வேறு எவர்களுக்காக வென்று உம்மிடம் அமைந்து கிடக்கின்றது?

தான வெங்களி றேடு மிந்திரன் சாப முந்தொலையா
மேனி தந்தகல் யாண சுந்தரர் மேவு வண்பதியாம்
வானி மிர்ந்திட வாடு மொண்கொடி வால சந்திரனும்
கூனி மிர்ந்திட வேநி மிர்ந்திடு கூட லம்பதியே. 44

மதநீரையுடைய கொடிய ஐராவதமென்னும் யானையினது சாபத்தோடுஇந்திரனுடைய சாபத்தையும் நீக்கிநல்ல வடிவத்தை வழங்கிய கல்யாண சுந்தரரென்னும் திருநாமத்தையுடைய சொக்கேசப் பெருமான் திருவுள மகிழ்ந்து எழுந்தருளியிருக் கின்ற வளம் பொருந்திய திருத்தலம், மேலுலகத்தை அடைந்து

நெருங்க அசைகின்ற ஒள்ளிய கொடிகள், வானத்திலேயுள்ள பிறைத் திங்களும் வளைவு நிமிரும்படியாக உயர்ந்துள்ள அழகிய கூடலாகிய நகரமேயாகும்.

அஞ்சேன் மடநெஞ்சே யபிடேகச் சொக்கரருட்
செஞ்சே வடிக்கடிமை செய்யார்போல் – துஞ்சா
தெறிதிரைக் கருங்கட லேய்க்கு
மறலியற் கூந்தற் காடமர்க் கண்ணே. 45

அறியாமை பொருந்திய மனமே! அபிடேகச் சொக்கநாதப் பெருமானது மெய்யடியார்களுக்கு அருளைப் புரிகின்ற சிறந்த சேவடிகளுக்கு அடிமை பூண்டு தொண்டு செய்து ஒழுகாதவர்களைப் போல ஒருநிலை பெறுமல் அச்சத்தை அடையாதே. கருமணல் போலும் இயல்பைக் கொண்ட கூந்தலையுடையவளான தலைவிக்கு அசைகின்ற போர்த் தொழிலையுடைய கண்கள் வீசுகின்ற அலைகளையுடைய கரிய கடலை ஒத்திருக்கும்.

கண்முத் தரும்பின கொங்கைபொன் பூத்த கனிபவளத்
தொண்முத் தரும்புமென் பெண்முத்துக் கேமுத்த முண்டிமயத்
தண்முத் தமைந்த தமனிய மேதலைச் சங்கம் பொங்கும்
பண்முத் தமிழ்க்கொர் பயனே சவுந்தர பாண்டியனே. 46

இமயமலையில் தோன்றிய குளிர்ந்த முத்துப்போன்ற பார்வதியம்மை தங்கிய திருமேனியையுடைய பொன் போன்றவனே! முதற் சங்கத்திலிருந்து விளக்கம் பெற்று வருகின்ற திருந்திய இயல், இசை, நாடகமென்னும் மூன்று தமிழுக்கும் ஒப்பற்ற பயனுக விளங்குபவனே! சவுந்தர பாண்டியனுக எழுந்தருளியிருந்தவனே! தலைவிக்குக் கண்களிலிருந்து முத்துப் போன்ற நீர்த்துளிகள் வெளிவந்தன. கொங்கைகள் பசலையால் பொன்னிறத்தை அடைந்தன. கனிந்த பவளம் போன்ற வாயில் ஒளியையுடைய முத்துப்போன்ற பற்கள் விளங்கப் பெற்ற எனது பெண் முத்தாகிய தலைவிக்கு உன்னைவிட்டுப் பிரிந்திருத்தலே உள்ளது.

பாணரு மழலைச் சீறியாழ் மதுரப்
  பாடற்குத் தோடுவார் காதும்
பனிமதிக் கொழுந்துக் கவிர்சடைப் பொதும்பும்
  பாலித்தாய் பாட்டளி குழைக்குங்

கோணரு வுளைப்பூங் கொத்தலர் குடுமிக்
குறுங்கணெட் டிலைச்சிலை குனித்த
கூற்றுயிர் குடித்தாய்க் காற்றலா மலதென்
கொடியிடைக் காற்றுமா றுளதோ
சேணுறுப் பசும்பொற் றசும்பசும் பிருக்கும்
சிகரியிற் றகரநா றைம்பாற்
சேயரிக் கருங்கட் பசுங்கொடி நுடங்கும்
செவ்வியிற் சிறைமயி லகவத்
தூணுரு முழவுத் தோண்மடித் தும்பர்
சுவல்பிடித் தணைந்துபார்த் துணங்கும்
தோரண மாடக் கூடலிற் சோம
சுந்தரா சந்த்ரசே கரனே. 47

மிகவுயர்ந்த பசும்பொன்னாலாகிய கலசம் நெகிழ்ந்திருக்கப்பெற்ற மலைபோன்ற மாளிகையின் மேற்பகுதியில் தோகையை உடைய மயில்கள் மயிர்ச்சாந்தின் மணம் வீசுகின்ற கூந்தலையும் செவ்வரி படர்ந்த கருமையான கண்களையுமுடைய பசுமையான பூங்கொடி போன்ற ஒரு மங்கை அசைந்தாடுகின்ற தன்மையைப் போல நடனமாட அதனைத் துணையொத்த முழவு போலத் திரண்டு உருண்ட தோளை மடித்து வைத்துப் பிடரியைக் கையால் தாங்கிக்கொண்டு அண்ணாந்து பார்த்து வருகின்ற தோரணங்கள் கட்டிய மாளிகைகளையுடைய கூடலம் பதியில் சோமசுந்தரக் கடவுளே! சந்திரனைச் சடையில் தரித்தவனே! இசை நீங்காத மழலைச் சொல் போன்ற சிறிய இனிய யாழிசைப் பாட்டுக்குத் தோடணிந்த நீண்ட காதுகளையும் குளிர்ந்த பிறைத்திங்களுக்கு விளங்குகின்ற சடைக்கற்றையையும் வழங்கியருளினாய். இசைப்பாட்டையுடைய வண்டொழுங்காகிய நாணி பூட்டப்பெற்ற வளைவையுடைய உள்ளீடில்லாத பூங்கொத்துக்கள் விரிந்த நுனியையும் சிறிய கணுக்களையும் நீண்ட இலைகளையுமுடைய கரும்பு வில்லை வளைத்த யமன் போன்ற மன்மதனது உயிரை உண்ட உன்னால் அந்த இசைப் பாட்டுக்கும் பிறைத்திங்களுக்கும் பொறுத்திருக்க முடியுமே யல்லாமல் எனது மகளாகிய பூங்கொடி போன்ற இடையையுடைய இவளுக்குப் பொறுக்கும் வழி இருக்கிறதோ?

கரும்பொறிச் சுரும்பர் செவ்வழி பாடச்
சேயிதழ் விரிக்கும் பொற்பொகுட் டம்புயம்
பாண்மகற் கலர்பொற் பலகை நீட்டும்
கடவுள்செங் கைக்குப் படியெடுப் பேய்க்கும்
தடமலர்ப் பொய்கைத் தண்டமிழ்க் கூடல்
ஒண்ணுதல் றழீஇய கண்ணுதற் கடவுள்
எண்மர் புறந்தருஉம் ஒண்பெருந் திசைக்குத்
தூய்மைசெய் தாங்குப் பானிலா விரிந்த
இரசதங் குயின்ற திருமா மன்றகம்
பொன்மலை கிடப்ப வெள்ளிவெற் புகந்தாய்க்குச்
செம்பொன் மன்றினுஞ் சிறந்தன் றுயினும்
கருந்தாது குயின்றவென் கன்னெஞ் சகத்தும்
வருந்தியும் வழங்கல் வேண்டும்
இருவே றமைந்தநின் ஒருபெருங் கூத்தே. 48

கரிய புள்ளிகளையுடைய வண்டுகள் செவ்வழி என்னும் பண்ணைப்பாடச் சிவந்த இதழை விரிக்கின்ற கொட்டையை யுடைய பொற்றாமரைப்பூ ஒரு பாணனுக்கு விளங்குகின்ற பொற்பலகையை நீட்டித் தந்த சொக்கலிங்கப் பெருமானது சிவந்த கைக்கு உவமை எடுத்துக் காட்டுவதை ஒத்திருக்கின்ற பெரிய மலர்கள் விரிகின்ற பொற்றாமரைக் குளத்தையுடைய குளிர்ந்த தமிழ் வழங்கும் மதுரையம்பதியில் எழுந்தருளியுள்ள ஒளி பொருந்திய நெற்றியையுடைய மீனாட்சியம்மை தழுவிய நெற்றிக் கண்ணையுடைய கடவுளே! திசைக் காவலர் எண்மராற் பாதுகாக்கப் பெறுகின்ற ஒள்ளிய பெரிய எட்டுத் திசைகளுக்கும் தூய்மை செய்தாற் போலப் பால்போன்ற வெள்ளிய நிலவொளி பரவுதற்கிடமாகிய வெள்ளியாற் செய்த அழகிய பெரிய அம்பலம் பொன்மலையாகிய மேருமலை இருக்கவும் வெள்ளிமலையாகிய கைலாயத்தை விரும்பி உறைகின்ற உனக்குச் சிவந்த பொன்னம்பலத்தைவிடச் சிறந்ததாயிற்று. ஆனாலும் கரிய இரும்பினாலாகிய கல்லையொத்த எனது மனத்தினிடத்திலும் ஊனமும் ஞானமுமாக இருவேறு வகைப்படப் பொருந்திய உனது ஒப்பற்ற பெரிய கூத்தை வருந்தியாயினும் புரிந்தருளுதல் வேண்டும்.

---

[தொடரும்]



திருச்செந்திலாண்டவன் துணை.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு

★

[புதிய மலிவுப் பதிப்பு — 1961]

புதிய பதிப்பு பிரதி ஒன்றின் விலை ரு. 3–50 ந. பை. ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

(முந்தின பதிப்பு பிரதி ஒன்றின் விலை. ரு. 6/–)

(தபால் கட்டணம் வேறு)

768 பக்கங்கள் கொண்டது. (128 + 621 + 19) உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப் பெற்றது.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய குறிப்புரை, ஆராய்ச்சி, முதலியவற்றுடன் கூடியது.

ஒரே சமயத்தில் 5 பிரதிகளும் அதற்குமேல் வாங்குபவர்களுக்கும் 20% கழிவு உண்டு.

இதன் விற்பனைத் தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்தைச் சாரும்.

கிடைக்குமிடம்:–

ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர்
ஸ்ரீவைகுண்டம் P. O. :: (திருநெல்வேலி மாவட்டம்)

# கூறியதும் குறிப்பிட்டதும்

திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள், எம். ஏ.,
412. இடையர் தெரு, தஞ்சாவூர்.



கம்பனது கவிதைநலத்தில் குறிப்பிடத் தக்க சிறப்பு ஒன்றுளது. அவன் பன்னூறு பாடல்களுக்கு முன்னர் கூறியதை மறவாது பின்னர் குறிப்பிடும் திறமாகும். எதையும் விட்டகுறை தொட்டகுறையாக விடுதல் எவர்து இயல்புமாகும்; அதிலும் பல காண்டங்கள் கடந்தும், பல்லாயிரம் பாடல்கள் பாடிச் சென்றும், முன்னர் சொன்னதை மறத்தல் கூடும். ஆனால் தமிழ் வம்பனும் கம்பனே நினைவாற்றல் கொண்டு, தொடங்கி நிறுத்திய ஒன்றை, ஏற்ற இடத்தில் இன்றியமையாத தருணத்தில் நிறைவு பெறுமாறு செய்துள்ளான்; தொடர்பு படுத்தியுள்ளான். இத்தகு திறம் காண்பதே இக்கட்டுரையின் கருத்தாம்.

சொல்லப் புகுந்த எதையும் அரைகுறையாக விடுதலில்லாது ஆன்ற புலமையால் அதனை இனிதே கூறி முடிக்கின்றான் கம்பன். ஒரு சில எடுத்துக்காட்டுகள் கொண்டு இதனைத் தெளியலாம்.

அரக்கர்தம் கொடுமை ஒழித்து, தவம்புரி முனிவர்கட்கு யாதொரு தீதும் நேராவண்ணம் காத்தற் பொருட்டு 'அக்கரிய செம்மலைத் தருதி' என இராமனைத் தருமாறு தயரதனை வேண்டுகின்றான் கோசிக முனிவன். தவமிருந்து பெற்றெடுத்த அந்தமிழ் அழகனை, அதிலும் பட்டத்திற் குரிய பெருமகனை, தயரதன் உயிர் நிலையாம் இராமனை வேண்டியதும், செய்வது இன்ன தென்றறியாது திகைத்துவிடுகின்றான் தயரதன்.

புண்ணிலாம் பெரும்புழையில் கனல் நுழைந்தாலெனக் கவல்கின்ருன்; கண்ணிழந்தான் பெற்றிழந்தான் எனத் துடிக்கின்ருன். கேட்டவனே கடுந்தவம் மிக்க, சினமும் சீற்றமும் சான்ற விசுவாமித்திரன். மறுக்கத்தான் முடியுமா? மறுத்தால் தான் மாண்புடன் வாழ முடியுமா? தானே காவல் புரிய வருவதாகக் கழறுகின்ருன்; பயனில்லே. எனவே வேறு வழியின்றி இராமனே உடன் அனுப்புகின்ருன். இராமனுக்குத் துணையாக இலக்குவனும் பின்தொடர்கின்ருன். இராமன் தயரதனைப் பிரிந்து செல்லும் பான்மையை:

அன்ன தம்பியுந் தானும் ஐயனும்
மன்னன் இன்உயிர் வழிக்கொண் டாலெனச்
சொன்ன மாதவற் ருெடர்ந்த சாயைபோற்
பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினுன். (பால-கையடை: 20)

இளமை முதல் இராமனைப் பிரிந்தறியா மன்னர் மன்னன் இது போழ்து முதன்முதலாகப் பிரிகின்ருன். இராமன் மேல் உயிரையே வைத்துள்ளானன்ரே அயோத்தி வேந்தன்? தயரதன் உடல்; அவ்வுடலே இயக்கும் உயிர் இராமன். உயிரின்றி உடல் நிலேபெறச் செல்லுமோ? அல்லது உயிரைத்தான் உடல் பிரிதல் கூடுமா? தயரதன் உயிர்நிலேயே இராமன்தானே! அத்துணை அளவு கடந்த எல்லேயில் பேரன்பு இராமன் பால் தயரதனுக்கு. எனவேதான் இராமன் பிரிந்து சென்றது எப்படி என்ருல் இப்படித்தான் எனும் முறையில்-பிரியும் நிலேயில் தயரதன் அடைந்த மனநிலேயை அப்படியே 'தெள்ளத் தெளியத்' தீட்டிக் காட்டுகின்ருன் தீந்தமிழ்க் கம்பன்.

இங்ஙனம் இராமனைப் பிரித்தவர், பன்னூறு பாடல்கட்குப் பின்னர் இராமன் தயரதனே எதிர்கொள்ளும் நிலேயினையும் சித்திரிக்கின்ருர். மிதிலேமாநகரில் எடுத்தது காணும்படியும், இற்றது கேட்குமாறும் வில் வளைத்து வாகை சூடிய பெருந்தகையாம் இராமன் சீதையை மணக்கு முன் அத்திருமணத்திற்கென அயோத்தியினின்று திரண்டு வரும் தயரதனே எதிர் சென்று அழைத்துவரச் செல்கின்ருன். முன்னர் விசுவாமித்திரனுடன் சென்ற காலே பிரிந்தவன், இப்போதுதான் தந்தையைச் சந்திக்கின்ருன். பிரிந்தவர் கூடினுல் பேசவும் வேண்டுமோ? பிரிவுத்

துயர் தாங்காது திங்கள் பல துயருற்ற தயரதன், தன் உயிரனைய மைந்தனைக் காணப் போகின்றான்; கண்டும் விட்டான். இதனைக் கம்பர்

காவியுங் குவளையுங் கடிகொள்கா யாவுமொத்து
ஓவியஞ் சுவைகெடப் பொருவதோர் உருவோடே
தேவருந் தொழுகழற் சிறுவன்முன் பிரிவதோர்
**ஆவிவந் தென்னவந்து** அரசன்மாடு அணுகினான்
(பால. எதிர்கோள்-22)

என்றமைக்கின்றார். இக்கூற்று பல்லாற்றான் பொருந்தி நிற்றல் காண்க. முன்னர் பிரிந்த உயிர் மீண்டு வந்தணைதல் போல் என்று கூறவேண்டிய இன்றியமையாமையுளது. உயிர் பிரிந்திடின் உடல் (தயரதன்) யாங்ஙனம் நிலைபெறுதல் இயலும்? முன்னே உயிர் பிரிந்தது என்றுகூறி அத்தோடு விட்டு விட்டால் பின் அவ்வுடலின் நிலை என்னவாயிற்று? உயிர் தாம் யாங்கு சென்றடைந்தது என்பன போன்ற எண்ண அலைகள் எழும்! இவை போன்ற எண்ணம் எள்ளளவும் எழும்பா வண்ணம் ஏற்ற ஒன்றினை எடுத்து இயம்பிவிடுகின்றான் ஏந்து புகழ்க் கம்பன்.

எடுத்த ஒன்றைத் தொடுத்து முடித்த இத்திறத்தில் அமையும் இனிமையும் நுட்பமும் ஓர்தல் இன்றியமையாததாகும். ஒருபக்கம் எழுதி அடுத்த பக்கத்திற்கு வருவதற்குள்ளாகவே, முன்பக்கத்தில் எழுதியதை மறந்து விடுகின்றோம்; ஏன்? ஒரு வாக்கியத்தை ‘அவர்கள்’ எனத் தொடங்கிவிட்டு, தொடங்கியமை மறந்து ‘வந்தது’ என முடிக்கின்றோமே? ஆனால் கம்பனோ படலம் பலவும், காண்டம் சிலவும் கடந்தும்கூட சொன்னதை மறவாது, பிரிந்த உயிர் மீண்டு வந்து சேர்வதாகச் செப்புகின்றான்.

முன்னர், தயரதனது உயிர் பிரிவது போலப் பிரிந்து போனான் இராமன் என இயம்பியது அமங்கலம் எனக் கருதி, மங்களமிக்க மணவினையின் போது, முன்பிரிந்த உயிர் மீண்டது போலக் கூடினான் என மங்கலமாக முடிக்கின்றான்.

இத்தகையதொரு பகுதி இன்னொரு இடத்திலும் வருகிறது. மாயமானாக வந்த மாரீசனைக் கொன்று, மாயம் உணர்ந்து

பன்னசாலை நோக்கி விரைகின்றான் இராமன். அங்கே சீதை யைக் காணவில்லை! அவளைத்தான் அரக்கர்கோன் கொண்டு சென்று விட்டானே!

தயரதனது உயிர்நிலையே இராமன் என்றால், சீதையின் உயிர்நிலை இராமனல்லாது வேறு எதுவாக இருக்க முடியும்? இராமன் உயிர்; சீதை உடல், எனவே உயிர் உடலை நாடி ஓடோடி வருகின்றது. இதனைக் கம்பன்;

ஓடி வந்தனன் சாலையின் சோலையி னுதவுந்
தோடி வந்தபூஞ் சுரிகுழ லாள்தனைக் காணான்
கூடு தன்னுடை யதுபிரிந்து ஆருயிர் குறியாத்
தேடி வந்தது கண்டில தாமென நின்றான்.

(ஆரண். சடாயு-158)

எனக் கூறுகின்றான். இவ் அவலநிலையில் இன்துணையைப் பிரிந்த இராமன் பிறகு அவளைக் காணாது துயருற்று இறுதியில் இலங்கை வேந்தனை அழித்த பின்னரே அவளைக் காண்கின்றான். இறுதியில் செம்மல் சீதையைக் கண்ட திறத்தை,

மானமீது அரம்பையர் சூழ வந்துளாள்
போனபே ருயிரினைக் கண்ட பொய்யுடல்
தானது கவர்வுறுந் தன்மைத் தாமென
ஆனனங் காட்டுற அவனி எய்தினாள் (யுத்த. மீட்சிப்-58)

எனக் குறிப்பிடுகின்றான் கம்பன். தன் உடலைப் பிரிந்த உயிர் மீண்டு அதனைக் காணாதது போல், சீதையைப் பிரிந்த இராமன் மீண்டுவந்து அவளைக் காணாது கலங்கினான் எனப் பிரிந்தமை சுட்டியை கம்பன்; அப்படியே உயிரையும் உடலையும் பிரித்து வைத்தல் அமங்கலமாகும்; அஃது ஆன்ற தமிழ் நெஞ்சத்திற்கு அழகுமாகாது என்பதுணர்கின்றான். ஆயிரமாயிரம் பாடல்கள் கடந்தும் இதனை மறவாது நினைவு கூர்ந்து, சிறை மீட்கப்பட்ட சீதை இராமனைக் கூடும் நிலையினைக் குறிக்குங்காலை, போன உயிரைக் கண்ட உடல் அதனைப் பற்றுமாப் போன்றதொரு முகத் தோற்றத்தோடு சீதை இராமனைக் கண்டாள் எனப் பிரிந்தஉயிரையும் உடலையும் கூட்டிவைக்கின்றார்; அமங் கலத்தை மங்கலமாக்குகின்றார் மாத்தமிழ்க் கம்பன்.

இவண் சிந்தனே வேண்டற்பாற்று; நுண்ணிதின் உணரின் நயமும் நலமும் காணலாம். இராமன் உயிர்; தயரதன் உடல். தயரதனைப் பிரிந்ததும் பின் கூடியதும் இராமனே. ஆதலான் அவ்விரு செயலையும் சுட்டுங் காலை (மன்னன்) உயிர் வழிக் கொண்டா லென்ன எனவும், பின் பிரிவதோர் ஆவி வந்தாற் போல என்றும் உயிரின் செயலாகவே உரைத்தார்.

ஆனுல் அடுத்த சூழ் நிலையில் சிறிது மாற்றம். இராமன் உயிர்; சீதை உடல். சீதையைப் பிரிந்ததும், பின் தேடி வந்ததும் இராமனே; ஆதலால் அச்செயலைச் சுட்டுங்காலை உடலைப் பிரிந்த உயிர் அவ்வுடலை நாடியும் தேடியும் ஓடி வரும் உயிரின் செயலாகவே செப்புகின்ருன் செந்தமிழ்க் கம்பன். ஆனுல் மீட்சிப் படலத்தில் இராமனை நாடி வருவது சீதை; எனவே உடலின் செயலாக-உடல் உயிரை நாடி வருவதாக நயம்பட நவில் கின்ருன் நந்தமிழ்க் கம்பன்.

இங்கே பொருட் பிறழ்வோ, முறையோ சிறிதும் வழுவாத முறையில் நயம்பட உரைக்கின்ருன். இத்துணை நினைவாற்றல் மிகு கவிஞனைக் காண்டல் அரிது.

திருமாலே இராமனுகவும், இலக்குமியே சீதையாகவும், விண்ணினின்று மண்ணகம் போந்து பிறந்ததாகவன்ருே கதை யுளது. கூடியிருந்த இருவரும் இப்பிறப்பு பற்றிப் பிரிந்தனர். திருமால் இராமனுக அயோத்தியிலும், இலக்குமி சீதையாக மிதிலையிலும் பிறந்தனர். இருவரும் அடுத்துக் கூடுங் காட்சி மிதலைப் படலத்தில் அமைகிறது; ஒருவரை யொருவர் காண் கின்றனர். இக்காட்சி உடனே கம்பனுக்கு முன்னைய நிலையைக் முன்னிறுத்துகிறது. எனவே பிரிந்தவர் கூடினுல் இயம்பு தற்கு என்ன இருக்கிறது? நிகழ்ச்சி தாம் நவிலற் பாலதோ? என்கிருர்.

கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினுற் பேசவும் வேண்டுமோ? (பால. மிதிலை-36)

இங்கும் முன்னை நிலைக்கேற்பவே பின்னை நிகழ்வையும் அமைக் கின்ருர் அழகு தமிழ்க் கம்பன் எனும்போது இதயங் கனி கிருேம்; கம்பர் திறம் இருந்தவாறு என்னே என வியக்கிருேம்.

இன்னொரு இணையற்ற பகுதி எண்ணி எண்ணி இறும்பூது எய்தும் இனிமை யதாகும். இஃது இராவணனைப் பற்றியது.

கண்டதும் காதல் (Love at first sight) என்பார்கள்; ஆனால் காணாமலே காதல் கொள்கின்றான் இலங்கை வேந்தன் இராவணன்; தன் பிழை மறைக்க அண்ணனிடம் அழகின் செல்வி சீதையின் இணையில் அழகையே எடுத்தோதுகின்றாள் சூர்ப்பணகை. அது கேட்டதும் அனைத்தையும் மறந்தான்-அவளை மட்டும் ஏனோ மறந்தானில்லை. காணுமுன்னரே-கேட்ட நிலையிலேயே அவள்பால் காதல் கொண்டான், இதனைக் கூற வந்த கம்பர்,

**மயிலுடைச் சாய லாளை வஞ்சியா**
**முன்னம் நீண்ட**
**எயிலுடைய இலங்கை வேந்தன் இதயமாம்-**
**சிறையில் வைத்தான்.** (ஆரண். மாரீசன்-85)

என்கிறார்.

இவ்விதமாக இதயச் சிறையில் வைத்த செயல்தான் இலங்கை வேந்தனுக்கு இழிவையும் அழிவையும் தந்தது. இதயத்தில் கற்பின் செல்வியை-மாற்றான் மனைவியை நயந்த காதல்தான் அவனுடைய இறுதிக்கே காரணமாயிற்று. அவன் அக் காதலோடு அழிந்து படின் சீதையின் கற்பு நிலைக்குக் களங்கம் உண்டாகுமே! மாற்றார் மனத்தால் நினைத்தாலே மகளிர் கற்பிற்குக் குறை நேருமே! அங்ஙனமிருக்கையில் அரக்கர்கோன் செல்வி சீதையை அகச்சிறையில் வைத்த வண்ணமே அழிந்துபடின் அவனும் சிறத்தல் இயலாது; அவளும் சீர்மையுறல் சாலாது. எனவேதான் யுத்த காண்டத்தில் இராகவன் புனித வாளி இராவணன் இதயத்தைத் துளைத்து உயிர் பருகியமை கூற வந்த கம்பன், முன்னைய நிகழ்ச்சியை மறவாது, நுட்பமுடனும் திட்பமுடனும் நுவல்கின்றான். இராவணன் இதயத்தில் ஊடுருவிய அம்பு, அவன் முன்னர் இதயத்தில் சீதையைக் கரந்த காதல் யாங்குளது எனத் தேடித் துளைத்தெடுப்பதாகத் தெரிவிக்கின்றார். இஃதே கம்பன் கவிதை:

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலும் கீழும்
எள்ளிருக்கும் இடமின்றி உயிரிருக்கும்
இடம்நாடி இழைத்த வாறோ?
கள்ளிருக்கு மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கு மெனக்கருதி யுடல்புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி.

(யுத்த, இராவணன் வதை - 239)

காண்டம் பல கடந்தும் இராவணன் அழிவு நிலை செப்பும் அவ்வவல நிலையிலும் அதனை மறவாது வைத்த காதலை எடுப்பதாக, எண்ணிய நிலையைப் புண்ணிய நிலையாக, கலங்கிய உள்ளத்தைக் களங்கமில் உள்ளமாக மாற்று மாற்றான் இங்ஙனம் இயம்பும் கம்பர் திறம் வியந்து செயல் மறந்து பாராட்டற் பாலது.

இது காறும், கம்பர் முன் கூறியதற்கேற்ப பின்னை நிகழ்ச்சிகளையும் பாங்குடன் பகரும் பான்மையர் என்றும்; அதற்குக் காட்டாகத் தயரதனைப் பிரிந்து பின்கூடிய இராமன் செயலையும், சீதையைப் பிரிந்து பின் தேடிய இராமன்-அவனை நாடி வரும் நங்கை சீதையின் செயல்களையும், இராவணன் தன் இதயத்தில் சீதையைச் சிறை வைத்த சிறு செயலும், பின் இராகவன் வாளி அதனை நீக்கியமையும் கம்பர் முன்பின் தொடர்போடு குறிப்பிட்டமையும் கண்டோம்.

இத்தகு திறம்-புலமைச் செறிவும், நினைவுத்திறனும் சான்ற உயர் புலவர்க்கே-தெய்வப் புலவர்க்கே திறம்பட அமைவதாகும். அத்தகு தெய்வப் புலவன்-தலைமைப்புலவன் தமிழ்க்கம்பன் எனும்போது இதயங்குளிர்கிறோம்; இறும்பூது எய்துகின்றோம். இல்லையா? கம்பனது தெளிந்த புலமையும் தேர்ந்த நினைவாற்றலும் நயமும் நலனும் பயக்கக் காண்கிறோம். அல்லவா? அத்தகு நலம் சால் நந்தமிழ்க்கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்பதில் வியப்பில்லை யல்லவா? அத்தகு வித்தகக் கவிஞன் வாழ்க! அவன் புகழ் ஓங்குக.!

# அந்துவனர் போற்றும் அறுமுகவேள்

திரு. தமிழண்ணல் அவர்கள்,
வேங்கடாசலபுரம்,



ஆசிரியர் நல்லந்துவனர், மதுரையைச் சார்ந்தவர் என்பது, மதுரையாசிரியன் நல்லந்துவனர் என்னும் சொற்றொடரான் பெறப்பெறும். அந்துவனர் இறையை வாழ்த்தி நல்லவரானர்; ஆசிரியப் பணியும் ஆற்றினர். ஆற்றவே, ஆசிரியன் நல்லந்துவனர் எனப்பட்டார். இவர் முருகப் பெருமானிடத்து, ஈடு இணையற்ற அன்புள்ளம் கொண்டு இலங்கியவர். இது, பரிபாடலில் எட்டாவது பாடலாக விளங்கும் இவரது பாடலான் உணரப்படும்.

இவர் முருகவேள் உறையும் திருப்பரங்குன்றத்தை உள்ள முருகப் பாடியுள்ளார். பாடவே,

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற்
சீர்மிகு முருகன் றண்பரங் குன்றத்(து)
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை"

என அகநானூறு, அந்துவனரைப் புகழலாயிற்று.

கலித்தொகையில், நெய்தற்கலியை இயற்றியவரும் அந்துவனரே என்பதை,

"பெருங்கடுங்கோன் பாலை குறிஞ்சி கபிலன்
மருதனிள நாகன் மருதம் — அருஞ்சோழன்
நல்லுத் திரன்முல்லை நல்லந் துவனெய்தல்
கல்விவலார் கண்ட கலி"

என்னும் வெண்பாவான் விளக்கமுறலாம்.

இந்நலம் தோய்ந்த அந்துவனர், முருகன் உறையும் பரங்குன்று பற்றியும், அக்காலத்தில் அவண் உறைந்த மக்கள் வாழ்வு பற்றியும், முருகனின் சிறப்பு குறித்தும் தமதுபரிபாடலில் விரித்தோதுவதைத் தொகுத்து நோக்குவோம்.

## முருகன் பெருமை

முருகப்பெருமானின் தோற்றம், சிறப்பு, இவைபற்றிய குறிப்புக்களை அந்துவனுர் தமது பாடலில் தந்துள்ளார். அவை:

1. மறுமிடற்று அண்ணலாம் திருநீல கண்டருக்கும் மாசற்ற உமையம்மைக்கும் திருமகனுகப் பிறந்த செல்வன்.

2. இமயமலையிலுள்ள தெய்வப் பொய்கையின்கண் வளர்ந்த தாமரை மலரின் இதழ்களிலேயே, முருகன் முதன்முதலாகத் தவழ்ந்தனன்.

3. அரக்கன் குன்ருக நிற்க, அக்குன்றினை உடைத்த ஒளிமிகு வேலை யுடையன்.

4. திருப்பரங்குன்றம் அதிருமாறு பிளிறுகின்ற யானையையும், எதிரொலிக்குமாறு கூவுகின்ற சேவலையும் தன்னகத்தே உடையன்.

5. கடம்ப மலர்களால் ஆகிய மாலைகளையே விரும்பி அணியும் உள்ளத்தினன்.

6. எவ்வரம் வேண்டினும், அவ்வரத்தை மறுக்காது வழங்கும் பான்மையன்.

7. இவற்றிற்கெலாம் மேலாக, துளசி மாலையையும் கருடக் கொடியையும் உடைய திருமாலும், காளையை ஊர்தியாகக் கொண்ட சிவபெருமானும், தாமரை மலரில் வைகும் நான்முகனும், நான்முகனிடத்திலே தோன்றிய பன்னிரு சூரியரும், தேவருலக மருத்துவர்களும், நூற்புலமை மிக்க வசுக்கள் எண்மரும், ஆதிரை நாளுக்குரிய சிவபெருமானது பெயரால் வழங்கப் பெறும் பதினெரு உருத்திரர்களும், எண்திசைகளையும் காக்கின்ற இந்திரன் முதலான எண்மரும், தேவர்களும், மற்றும் பலரும் முருகனைக் கண்டு போற்றுவதற்காக நாளும் திருப்பரங்குன்றம் வருகின்றனர். இத்தகைய மேதகு தன்மையும், ஒண்மையும், உயர்பான்மையும், ஆண்மையும் எய்தியவன் முருகப்பெருமான் எனப் போற்றுகின்ருர் அந்துவனுர்.

## திருப்பரங்குன்றம்

குமரவேள் உறையும் குன்றத்தின் சிறப்புக்களை, அந்து வனுர் குறித்துள்ளார். அவை:

1. மதுரையின் தென்பால் அமைந்துள்ளது திருப்பரங் குன்றம். அருவியும், பொய்கையும் சோலையும் மிக்கது.

2. திருமால், சிவன், நான்முகன், இந்திரன் முதலான தேவருலகிலுள்ள பலரும் வந்து வந்து, திருப்பரங்குன்றத்திலே தங்குகின்றமையான், திருப்பரங்குன்றம் இமயமலைபோல விளங்குகின்றது. முருகன் திருப்பரங்குன்றத்தில் உறைதலால், இங்குள்ள பொய்கை, இமயமலையிலுள்ள சரவணப் பொய்கை யைப்போல இலங்குகின்றது.

3. முருகப்பெருமானது யானையும், சேவலும் எழுப்பும் ஒலி, இக்குன்றில் எப்பொழுதும் எதிரொலியை எழுப்பிய வண்ணம் விளங்கும்.

4. மதுரையில் எழுந்த மணவொலி, காற்ருல் மோதுண்டு கலங்கிய கடலின் ஒலிபோன்றும், அக்கடல் நீரைக் குடிக்கும் மேகத்தின் ஒலிபோன்றும், இந்திரனுடைய இடியொலி போன்றும் ஒலிக்க ஒலிக்க, அதற்கு நேர் எதிராக, திருப்பரங் குன்றத்திலே எதிரொலி எழாநிற்கும்.

5. தண்பரங்குன்று, மகளிர்க்குக் களவிற் புணர்ச்சியும், கற்பிற்புணர்ச்சியும் தரவல்லது.

6. பரங்குன்றிலுள்ள சுனையில் முருகனது அன்பர்களான ஆடவரும் பெண்டிரும் ஒருங்கே நீராடினர்.

## திருப்பரங்குன்றஞ்சாலை

“திருப்பரங்குன்றத்திற்கும் மதுரைக்குமிடையிலுள்ள சாலை யில், ஐந்துளை குழல்போலவும், ஏழ்துளை குழல்போலவும், யாழின் இன்னிசை போலவும் தும்பியும், வண்டும் மிஞிறுமாகிய தேன் வண்டும் ஒலிக்கும். இச்சாலையின் கண்ணுள்ள சுனைகளிலெல் லாம் பூக்கள் பூத்திருக்கும். கொன்றை மரங்கள் கொடிபோலும் மலர்களுடன் பூத்துக் குலுங்கும். காந்தள் மலர்கள், அவ்விடந்

தோறும் மணம் நிரப்பும். மற்றும் பல்வேறு மலர்கள், அவண் மலர்ந்து மணம் வீசும். இவற்றிலிருந்து தேன்துளிகள் சிந்திய வண்ணமிருக்கும், மெதுவாக, இம்மணத்தினைத் தாங்கிய வண்ணம் தென்றல் காற்று, இச்சாலையில் வீசும்.

"குளிர்காற்று படவே மலைச் சிகரங்களில் மழைபொழியும். பொழியவே, நீர் நிறையும். நிறையவே குளிர்ந்த சோலைகள் பறிக்கப் பறிக்கக் குறையாத பூக்களைப் பூக்கும். குளங்களில் நீர் நிரம்பி வழியும். அத்தகைய மருத நிலத்திலே, செறிந்த மணல் பரந்ததும், மலர்கள் நிறைந்ததுமான பெருவழியே, மதுரைக்கும் திருப்பரங்குன்றத்திற்கும் செல்லும் வழியாகும்."

இத்தகைய ஓர் இனிய காட்சியை அந்துவனர் தமது பாடலில், நமக்குக் காட்டுகின்றார்.

## வழிபடுமுறை

முருகப் பெருமானை வழிபடுவதற்காக, இளமை தவழும் மகளிர் திருப்பரங்குன்றத்திற்கு எடுத்துச் சென்ற பொருள்களின் அட்டவணையை அந்துவனர் தமது பாடலில் தந்துள்ளார். அவை :

1. நிறத்தாலும் மணத்தாலும் வேறுபட்ட பல்வேறு சந்தனக் குழம்புகள்.
2. மிக்க மணம் வீசும் புகைப்பொருள்கள்.
3. காற்றில் அணையாத விளக்குகள்.
4. மணமிகு மலர்கள்.
5. இன்னெலி எழுப்பும் மத்தளம்.
6. இசையொலி யெழுப்பும் மணி.
7. நூற்கயிறு.
8. பொன்னுலாகிய மயில்.
9. பொற் கோடரி.
10. பொன்னுலாகிய பிணிமுகம் என்னும் யானையின் உருவம்.

மேற்கூறிய பொருள்களை எடுத்துச் சென்று, கோயிலில் கட்டிய மணியை ஒலிக்கச் செய்து, அதன் பின்னரே வழிபாடு நிகழ்த்தினர்.

இவ்வண்ணம் வழிபடும் மகளிர், முருகனிடம் பலவகையான வரங்களைக் கேட்கின்றனர். அவை:

1. பிரிந்து சென்ற தம் கணவரோடு நீராடுவதாகத் தாம் கண்ட கனவு, நனவாகுமாறு வையையில் நீர்பெருக வேண்டுமென வரம் கிடப்பர் சிலர்.
2. தமக்குக் குழந்தை வேண்டுமென வரம்வேண்டுவோர் சிலர்.
3. தம் கணவர், சென்ற இடத்தில் மிக்க பொருளை ஈட்டி வர வேண்டுமென வேண்டுவார் சிலர்.
4. போர்க்களத்தில் தம் கணவர் வெற்றி பெறுதல் வேண்டும் என்று, வேண்டி நிற்பர் வேறு சிலர்.

இவ்வாறாக, தத்தமக்கு வேண்டுவனவற்றை முருகனிடம் முறையிட்டு வேண்டினர். அவை கிடைத்தால், இன்னின்னவை முருகனுக்கு அளிப்பதாகச் சிலர் நேர்த்திக்கடன் பூண்பர்.

### மக்கள் வாழ்வு

செவ்வேள் வாழ்த்தாகிய அந்துவனாரின் பாடலான், அக் காலத்திய மக்களின் வாழ்வைப் பற்றிய சில குறிப்புக்களையும் நாம் அறிதற்கு இயலும். அவை:

1. ஏதேனும் ஒன்றை நம்பச் செய்தற்கு, புனிதமான பொருள் களின் மீதோ அல்லது இறைவன் மீதோ ஆணையிட்டுக் கூறும் வழக்கம், பண்டு மிக்கிருந்திருக்கிறது.
2. இறைவன் மீது ஆணையிட்டு, ஒருவன் பொய் உரைப்பானே யானால், அந்த இறைவனின் சினத்திற்கு ஆளாகி, அவன் இன்னலுறுவான் என்னும் எண்ணம் பண்டு மிகுத்து உள்ளது.
3. இரவுப் பொழுதைத் தலைவியின் வீட்டிலும், பகற்பொழுதை வேறொருத்தியின் இல்லத்திலுமாகக் கழித்து, அதனை மறைத்து உரையாடும் வழக்கமும் பண்டு இருந்துள்ளது.
4. கணவனைத் திருத்துவதும், ஓம்புவதும், நல்வழிப் படுத்து வதும் தலைவியின் தலையாய கடன்களாகவே அன்றும் விளங்கியுள்ளன.

5. தலைவன் பிழைப்பினும், அவனது பிழையைப் பொறுத்து அவனைக்காத்தல் வேண்டுமெனத், தலைவி நாள்தோறும் வழி பட்டிருக்கின்றாள். இது நல்ல உள்ளப்பாங்கு.

6. தோழி, எப்பொழுதும் தலைவிக்காகவே சார்ந்துபேசும் தன்மையளாகக் காணப்படுகின்றாள்.

7. ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னரே, காற்றால் எளிதில் அணைக்க முடியாத விளக்கை, நம் முன்னோர் கையாண்டுள்ளமை, அறிந்து வியத்தற்பாலதாம். மேகங்களில் குளிர்காற்றுப்படவே, மலைச்சாரலில் மழை பொழியும் என்னும் அறிவியல் கருத்தும், அவர்கள் அறிந்த ஒன்றாகவே விளங்குகின்றது.

8. காதலனோடு ஒன்றாக நீராட வேண்டுமெனவும், குழந்தை வேண்டுமெனவும், கணவன் மிக்க பொருளோடு திரும்ப வேண்டுமெனவும், தம் கணவர் போரில் வெற்றி பெற வேண்டுமெனவும் அக்கால மகளிர் இறைவனை வழிபட்டமையை நோக்குழி, அவர்களது உள்ளங்கள் இவைகளுக்கிடையிலேயே அலைமோதியுள்ளன என்பதை உணரலாம்.

செவ்வேளை அருந்தமிழால் வாழ்த்திப் போற்றிய அந்துவனாரை, நாமும் போற்றிப் புகழ்வோமாக !

---


## திருக்கோவையார் புதிய பதிப்பு



(பேராசிரியர் உரையும் பழைய உரையும் கூடியது)

784 பக்கம் வெள்ளைத்தாள். அடக்கவிலை

தனிப்பிரதி விலை ரூ. **2-90**

( தபால் கட்டணம் வேறு )

ஒரே சமயத்தில் 20 பிரதிகளுக்கு மேல் பெறுவோருக்கு

20% கமிஷன் உண்டு

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY
F. KINGSBURY, B. A. (Madras)
AND
G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 13, இதழ் 1-ன் தொடர்ச்சி]

## I
## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

13. காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி
யோதுவார்தமைநன்னெறிக்குய்ப்பது
வேதநான்கினுமெய்ப்பொருளாவது
நாதனுமநமச்சிவாயவே.

Equally important with the wearing of the sacred ash is the constant repetition of the five syllables, or panchakshara, 'Namasivaya.' This, which means literally 'a bow to Siva,' is the chief mantra or mystic utterance of Saivism. In Saivite catechisms a whole chapter is devoted to its uses.

13. Those who repeat it while love's tears outpour,
It gives them life, and guides them in the way.
'Tis the true substance of the Vedas four,
The Lord's great name, wherefore 'Hail Siva,' say.

---

(To be Continued)

---

Reproduced with the kind permission of Oxford University Press, Calcutta.

(N.B. Copies available for sale at the above Press.)

உ

சிவமயம்

பாலரூவாயர் துணை

# அருணந்தி முனிவர் அருஞ்செயல் மாலை

(மூன்ரும் பகுதி)

தேவகோட்டை "செட்டிநாடு" இதழாசிரியர்
"தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணுமலை ஆதீன விரிவுரையரசு,
மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர்
சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி"
வயிநாகரம். திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்
இயற்றியது.

---

[மலர் 12. இதழ் 12-ன் தொடர்ச்சி]

இடப மதியிற் சோறிடுதற் கியம்பு மையா யிரமங்கே ஈசர் புத்ல்வர் சண்டேச ரினிய நினைவிற் றைமதியில், உடலி னுயிராஞ் சோறுதவ வுற்ற வையா யிரமாரூர் உயர்ந்த பதியிற் குருபரனு ருணவு நிதியே ழாயிர நீர், படருங் குமரி ஆச்சிரமம் பண்பா ரன்னம் பாலிப்புப் பண்ணுர் திருத்தே வாரநிதி பகரு மிரண்டோ டரையிலக்கம், கடலில் மிதந்த காழிநகர் காக்குஞ் சட்டை நாதருக்குக் களபப் புழுகு சித்திரையிற் காப்புக் கேழைந் தானூறே 8

பாவநாசக் குறுமுனிவர் பரமர் புதல்வர் திருக்கோயிற் பணிக்குப் பத்தா யிரங்காசிப் பதியிற் பூச லார்நினைவால், மேவைப் பசியிற் சோறளிக்க விரும்பா ருயி ரம்மங்கே வேந்தர் சேது பதிநாமம் விளங்க வன்னம் பாலிப்புக், கீவ தான நாற் பதினு யிரம்ரா மேச வெழிற்பதியில் ஈடில் காள ஹத்திமன்ன ரிலங்கு மன்னம் பாலிப்புத், தேவர் தையில் செய்வதற்குச் செப்பு மையைந் தானூறு திருவார் பாவ நாசத்தில் செல்வக் குமர குருபரனுர் 9

பேரால் மடங்கட் டுதற்கென்று பெரிய பதினா யிரந் தேவைப் பிரியத் தலத்தி லைப்பசியிற் பேசுங் குமர குருபரனார், நேரா நினைவிற் சோறளிக்க நீடு மையா யிரமன்னோர் நினைவிற் பாபநாசத்தி னிலவும் வைகா சியிற்சோறு, சீராய் வழங்க வைம்ப தெனச் செப்பு நூறு திருப்பனந்தாள் செய்ய சடையார் நெய் விளக்குத் திகழ வையைந் தாநூறு, பேரார் தில்லை நீலகண்டர் பேசுந் தண்ணீர்ப் பந்தர்நிதி பேணு மேழைந் தாநூறு பெருகுங் குமர குருநினைவே 10

நிகழ வைத்தீஸ் வரன்கோயி னிமலர் பதியி லிடபமதி நேய வன்னம் பாலிப்பு நிதியே ழாயி ரம்நெல்லை, திகழும் பாப நாசத் திற் செல்வக் கோசம் வர்த்தனத்தைச் செய்ய வேழாயிரமருணைச் சீரார் குமர குருபரனார், புகழு மிடப மதிச்சோறு பொற்பாய் வழங்க வெழுபானாப் பொருந்து நூறு சுவாமிமலைப் புனிதப் பதியி லிதுபுரிய, மகிழு மேழா யிரந்திருவே மன்னு மாப்பா டித்தலத்தில் வளருஞ் சிவராத் திரிநிதியா வைத்த தொகையோ ராயிரமே 11

தில்லைப் பொன்னம்பலத்திலென்றுந் திகழு நெய்யாற் றிபமிடத் தெய்வக் குமர குருபரனார் சிறந்த நினைவில் முப்பதாம், நல்ல வாயி ரந்தில்லை நடன மன்னர் மார்கழியில் நறுந்தேர் மாகே சுரபூசை நடத்த வையா யிரமாங்கே, வெல்லுந் திருவா திரைவிழவின் மேலாந் தில்லை யந்தணர்கள் விசேட வன்னம் பாலிப்பு விளங்கு நிதிபத் தாயிரமே, சொல்லுந் திருக்குற் றாலத்திற் றூய குமர குருபரனார் துங்க நினைவு நாட்சோற்றுத் தூய நிதியை யாயிரமால் 12

அண்ணா மலையிற் றேவார நிதிநான் காறா யிரமாகும் அங்கே குமர குருபரனா ரரிய நினைவி லன்னமிடல், எண்ணுந் திருக்கார்த் திகைதன்னி லீரா றாயி ரம்பொன்னி யிலங்கு யானைக் காவிலெங்க ளின்பக் குமர குருபரனார், வண்ண நாளிற் சோறளிக்க வாய்த்த வேழா யிரமாகும் மருவுங் காழிக் குமரகுரு வளநா ளன்னம் பாலிப்பு, நண்ணு மையா யிரமதற்கே நாடும் பிரயா கைப்பதியி னல்ல வெண்ணே ழாநூறு நம்பர் புகலூர்த் திருத்தலத்தே. 13

---

[தொடரும்]

# இறவா இலக்கியம்

திரு. கே. சி. எம். மூக்கையா மன்ருடியார் அவர்கள்,
பெருநிலக்கிழார்,
துணைத்தலைவர், சென்னை மாநில ஆதிவாசிகள் சங்கம்,
தாண்டிக்குடி (கோடைமலை).

மூவாத் தமிழை முதன்மையாகக் கொண்டவர்கள் நாம். தமிழ் நிலைபெற்றிருப்பது தம்பாலுள்ள இலக்கண வரம்பாலும், இலக்கிய வளத்தாலும் தாம். மொழி தோன்ருமல், கண்ணாலும் கரத்தாலும் வேற்றுநாட்டார் தம் கருத்தைத் தெரிவித்துக் கொண்டிருந்த நேரத்திலே, 'இப்படித்தான் வாழவேண்டும்' என்று வாழ்வுக்கே இலக்கணம் கூறக்கூடிய அறமுறைநவிலும் நெறிமுறை இலக்கண இலக்கியங்களைத் தோற்றுவித்த பெருமை நமக்குண்டு. காலமென்னும் நெருப்பிலே வெந்தழிவுருது, புடமிட்ட பொன்போல் பொங்கிநின்று, எக்காலத்தும் புகழொளி வீசக் கூடியவை அவை.

"கற்பனைக்கு எட்டாத செவ்வாய்க் கிரகத்தைக் கண்டு பிடித்தவை தாளும், பென்சிலும், சில எண்களுமே'' என்றும், "சில எண்களின் கூட்டல்களின் விளைவே அணுகுண்டு'' என்றும் தம் ஆய்வுக்கு உறுதுணையாக விளங்கிய கருவிகளைக் கூறுவர் கணித அறிவியலார். இவ்வாறு இவர்கள் புறக்கருவி களைத் துணையாகக் கொண்டு கூறினர். ஆனல், நம் வாழ்வுக்கு இலக்கினை இயம்பும் அறிவிலக்கியப் புலவோர் தமது உள்ளம், பண்பு போன்ற உட்கருவிகளையே உறுதுணையாகக் கொண்டு, வாழ்வுக்கான செந்நெறி இலக்கியங்களைக் கூறினர். அத் தகைய தமிழிலக்கியங்கள், உலக இலக்கிய வரிசையிலே எத் தகைய இடம் பெறும் என்பதை மேனுட்டு இலக்கிய வல்லார் கூற்ருேடு ஒப்பிட்டு நோக்கின் தெள்ளிதிற் புலனும்.

"இலக்கணத்தாற் காரியப்படுவது இலக்கியம்" என்றனர் அளவை நூலார். மூல இலக்கணமாய் முன்னர்த் தோன்றி, தனக்குப் பின்னுல் எத்தனையோ வகைப்பட்ட இலக்கியங்கள் தோன்றுவதற்கு ஏதுவாம் தம்மைப் பெற்று இலங்கிய பெருந் தகைமை தொல்காப்பியத் திற்குண்டு. தொல்காப்பியம் கூறும் இலக்கண வரம்பினின்றும் பிறழாது, அந்நூலிற் கூறிய வண்ணமே செயற்படும் இயல்புவாய்ந்தவை நம் இலக்கியங்கள். இனிமேற் பிறர் சிந்தனை செய்து ஓர் இலக்கணநெறி கூற வழியேற்படாது, தானே வழிகூறிய, அந்தத் தனித்த இலக்கண நெறியிலே, வகுத்தும், தொகுத்தும், விரித்தும் கூறிய வழியிலே வந்தவை நம் இலக்கியங்கள்.

இலக்கியங்களில், பொதுவாக இருவகைப் பண்புகள் பேசப் பெறும். ஒன்று தேசீயப் பண்பு. பிரிதொன்று பொதுமைப் பண்பு. இலக்கியம் தோன்றிய நாட்டு மக்களின் உள்ளார்ந்த நெஞ்சப் பாங்கையும், செம்மையான நாகரிகப் பண்பையும், இவ்விரண்டு டன் பிணைந்துள்ள வாழ்வியற் சிறப்பையும் விரித்துணர்த்துவதே தேசீயப் பண்பமைந்த இலக்கியமாம். எந்நாட்டினருக்கும், எம் மொழியினருக்கும் எவ்வினத்தவருக்கும் ஏற்கும் வண்ணம் இனிய கருத்துரைகளை வழங்குபவையே பொதுமைப்பண்பு வாய்ந்த இலக்கியமாகும். தேசீயப் பண்பு வாய்ந்தவை நம் இலக்கியங்கள்; அப்பண்பை உலக மாந்தருக்கு உள்ளவாறே தெள்ளிதின் உணர்த்துபவை அவை என்பது சொல்லாமலே பெறப்படும். அது போன்றே, எங்கும், எவருக்கும் ஏற்கும் வண்ணம் பொதுமைப் பண்பையும் எடுத்துப் பேசுகின்றன நம் இலக்கியங்கள். எல்லா மக்களுக்கும் பொதுவாம் தன்மை யமைந்த அறவொழுக்கத்தைப் புகலுபவை நம் இலக்கியங்கள்.

"மக்கள் யாவர்க்கும் பொதுவாகப் பயனளிக்கும் நூல்கள் மாத்திரமே இலக்கியம்" என்று இலக்கியத்திற்கு வரையறை கூறு வார் ஹட்சன் (Hudson) என்னும் அறிஞர். தமிழிலக்கியங்கள் யாவர்க்கும் பொதுவாம் தன்மை பெற்றிலங்கிப் பயனளிக்கும் பண்பினை பெஸ்கி, போப் ஹிராஸ், கமில்ஸ்வலபெல் முதலான மேனுட்டறிஞர் ஏற்றியும், போற்றியும் கூறுவதின்றும் நாம் அறிந்து கொள்ளலாம்.

அத்தகைய பொதுப்பயனளிக்கும் இலக்கியப் பாக்கள் எப்படி அமைந்திருக்கும் என்பதை Reed என்பார் துணையுடன் காண்போம். "கருத்துக்களின் சேர்க்கையை வெளிப்படுத்துவது உரை; கருத்துக்களின் படைப்பை வெளிப்படுத்துவது பாட்டு" என்று கூறுகின்றார். உள்ளத்தினின்றும் உணர்ச்சி வாயிலாய் வெளிப்படும் சொல்லோவியத்தை அவ்வாறே வடிப்பதைப் படைப்பு என்கின்றோம். நம் தமிழ்ப் புலவர்களின் தெளிந்த கருத்துக்களின் படைப்பே நம் இலக்கியங்கள். அறந்திறம்பா அன்னவர் நெஞ்சினின்றும் பிறந்தவையே அப்பாடல்கள். கவிதையில் தம் உணர்ச்சியை ஊட்டிக் காட்டியவர்கள். "உள்ளத்தில் உள்ளது கவிதை; உணர்ச்சி உருவெடுப்பது கவிதை"–என்று கவிமணி கூறுவது ஈண்டு கருதற்பாலது.

உள்ளத்தினின்றும், உணர்ச்சி வயத்துடன் பிறக்கும் கவிதைத் தன்மையைக் 'கவிதைவெறி' என்கிறார் பாரதி. பிளாட்டோவும் (Platto) 'ஒரு தெய்வப் பெண் அருளால் உணர்ச்சிக் கவிதை பிறக்கும்' என்கின்றார். இத்தகைய உணச்சிப் புலவர் களை, கீட்ஸ் (Geets) என்பார் 'உணர்ச்சிவேகப் பாணர்கள்' என்று குறிக்கின்றார்.

"என்னுடைய தாயும் உன்னுடைய தாயும் யார்? யார்? என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையில் உறவினர்? யானும், நீயும் இதற்கு முன்னரே அறிவோமா? அப்படி இருந் தும், செம்மண் புலத்தில் பெய்த மழைநீர் செந்நிறம் ஆனது போல, நம்மிருவர் அன்புடை நெஞ்சமும் ஒன்றாகக் கலந் தனவே"– என்று தலைவன் தலைவியை நோக்கிக் கூறுகின்ற குறுந்தொகைக் காட்சியும்,

"நாடகத்தில் நடிப்பது-போன்று, உன் அடியார் போல நான் பொய்யாக நடித்தேன் வீடு பேற்றை விரும்பி; அந்தோ! மணிக்குன்றக் கூத்தப் பெருமானே! இடையறாமல் அன்பு யான் உன்பால் செலுத்தும் வண்ணம் என்றனக் கருள்வாய்"– என வாதவூரண்ணல் ஆடும் பெம்மானிடத்தே அழுதரற்றுவதும்,

"எனக்கெனத் தனித்தவொரு செயலும் ஈண்டில்லை; எல்லாச் செயலும் உன்றனுக்கே செய்ய என் உடல், பொருள்,

ஆவி மூன்றையும் தந்தேன். மனத்தகத்துள்ள மாசு எல்லாம் மாற்றி, எம்பிரானே! நீ எவ்வண்ணம் எண்ணுகின்றனையோ அவ்வண்ணமே அருள்செய்'' என்று திருப்பல்லாண்டு கூறு கின்ற தன் செயலற்ற நிலைக்காட்சியையும் நாம் காணும் போது, நம்மை அறியாமலேயே உணர்ச்சியின்பாற்படு கின்றோம்.

இவ்வாறு அறிவொடு பொருந்திய உணர்ச்சியின் வாயி லாய்ச் சிறந்த கவிதைகளாக உருவெடுத்தும் எங்கும் எவரும் புகழும் ஆற்றல் சான்ற அழகினவாய், அகத்தை விரித்துக் காட்டும் திறத்தனவாய் விளங்குபவை நம் இலக்கியங்கள்.

“இலக்கியம் சிறந்த கருத்துக்களைக் கொண்டது'' என்பார் எமர்ஸன் (Emerson). ‘உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே’- என்று ஐந்திறம் நிறைந்த தொல்காப்பியன் கூறுவதும், ‘பண்புடையார் பட்டுண்டு உலகம்’ என்று பொதுமறை புகல்வ தும், ‘பிறர்க்கென முயலுநர் உண்மையானே, உண்டாலம்ம இவ்வுலகம்’- என்று அறமும் மறமும் புகலும் புறநானூறு கூறுவதும்- இன்னோரன்ன மனித சிந்தனையின் மிக மேம்பட்ட கருத்துக்களை இனிதின் எடுத்துரைக்கும் திறன்படைத்தவை நம் இலக்கியங்கள்.

“இலக்கியம், உள்ளதை உள்ளவாறே உரைக்க வேண்டும்'' என் பார் பிளாட்டோ (Platto). உள்ளதை உள்ளவாறே உரைத் தால் இலக்கியமாகாது; இலக்கிய நயம்பட உரைப்பதே இலக்கியப் படைப்பாகும் என்ற கூற்றை மறுத்துக் கூறவில்லை அவர். வாழ்வுக்கு வேண்டாத வறட்டுத் தத்துவங்களையோ, அப்போதைக்குச் சிரித்து மகிழக்கூடிய கற்பனையலங்காரங் களையோ கூறுபவை உண்மையான இலக்கியங்கள் ஆகா. நடந்த நிகழ்ச்சியை உள்ளத்திலெழும் தூயவுணர்வால் எடுத் தியம்புவனவே உண்மையான இலக்கியங்களாகும்.

“ அன்று காணப்பட்ட, அந்த முழுமதி நாளில் எங்கள் தந்தை எங்களுடன் இருந்தார்; இன்று காணப்பெறும் இந்த முழுமதி நாளிலோ வேற்றரசர் எங்கள் நாட்டைக் கொண்டனர்;

நாங்கள் தந்தையையும் இழந்து விட்டோம்''- என்று வேள்பாரி இறந்த பின் அவன் மகளிர் வருந்திப் பாடுவதும், "சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே, பெரியகட் பெறினே யாம் பாடத் தான் மகிழ்ந்துண்ணும் மன்னே''- என்று அதியமான் இறக்க ஔவை வருந்துமாறு வருவதும், "முத்தனே! முதல்வா! தில்லை யம்பலத்துள் ஆடுகின்ற அத்தா! உன் ஆடல் காண்பான் அடி யனேன் வந்தவாறே''- என்று கூத்தப் பெருமான் முன்னிலை யில் நின்று அப்பரடிகள் இயம்புவதும் இன்னோரன்ன உணர்ச்சி ஓவியங்களைக் காணுங்கால் பிளாட்டோவின் கருத்தும் கூட, நம் இலக்கியங்களுக்குப் பொருந்தியமைவதைக் காணலாம்.

"வாழ்க்கையின் விமரிசனம் இலக்கியம்''- என்கின்றார் மாத்யூ ஆர்னல்ட் (Matthew Arnold). இவ்வுலகின் தன்மை-பௌதிக அமைப்பு இவற்றை "மண் திணிந்த நிலனும், நிலனேந்திய விசும்பும், வளிதிரிதரு திசையும், வறிது நிலைஇய காயமும்''- எனவரும் புறப்பாட்டடிகளாலும்; "காலம் உலகம் உயிரே உடம்பே''- எனத் தொடங்கும் தொல்காப்பிய நூற்பா, "ஞாலமே விசும்பே இவை வந்துபோம், காலமே''- எனவரும் மணிவாசகம் இவ்விரண்டு பகுதியால் டாக்டர் ஆல்பர்ட் ஐன்ஸ் டீன் சொன்ன நான்காவது பௌதிக அளவையாகிய (Fourth Dimension) காலத்தைப் பற்றிய சிந்தனையையும் அறியலாம். மனித வாழ்க்கைக்குக் காரணமான இவ்வுலகைப் பற்றிச் சொன்னதுடன், மனிதன் பிறக்கின்ற சூழ்நிலையையும், பிறந்த வன் கல்வியறிவு பெற வேண்டிய இன்றியமையாமையையும், இவ்வறிவொழுக்கம் பெற்றவன் சமுதாயத்திற்கு ஆற்ற வேண்டிய தொண்டினையும்; அவ்வாறு ஆற்றி அதனால் வரும் புகழைப் பற்றியும், சுருங்கக் கூறின் வையத்துள் வாழ்வாங்கு வாழவேண்டிய வகை இன்னோரன்ன மனித வாழ்வின் சிறப் பியல்புகளை விமர்சிக்கின்றன. தமிழிலக்கியங்கள் என்றால், மாத்யூ ஆர்னல்டின் கொள்கையும் நமக்குச் சாலும் என்பது போதரும்.

ஆங்கில இலக்கிய வல்லார், 'கலை, கலைக்காகவா? கலை மக்களுக்காகவா?'- என்று வாதிப்பது போல, "இலக்கியத்திற்கும் ஒழுக்கத்திற்கும் தொடர்புண்டா ?''- என்றும் வாதிடுவர்; Literary

and Morality என்ற தலைப்பின் கீழ் அவர்கள் வாதிடுவதை நோக்கின் நம் இலக்கியத்தின் தனிப்பெருமை புலனாகும். இலக்கியத்திற்கும் ஒழுக்கத்திற்கும் தொடர்பு உண்டா என்று ஆராயக் கூடிய நிலையில் உள்ளார்கள் அவர்கள். ஆனால், நம் முன்னோர் அதைப் பற்றி முன்னரே ஆய்ந்து, 'ஒழுக்கம் இலக்கியத்தோடு இணைந்தது; இலக்கியம் வாழ்வோடியைந்தது' என்று கண்டனர். தம் இலக்கியங்களிலெல்லாம் ஒழுக்கத்தையே மையமாக, உயிர் மதிப்பாகக் கொண்டு வற்புறுத்தினர். ஒழுக்கத்திற்காகத் தனி இலக்கியத்தையே படைத்த பெருமை நமக்கு உண்டு.

மேனாட்டு இலக்கிய வல்லார், இன்று இலக்கியங்கட்கு வரையறை கூறினாலும், அன்னவர் கூற்றும் பொருந்துமாறு, முன்பு தாமே வரையறை செய்து இலக்கியம் யாத்த பெருமை நமக்கு உண்டு.

"நேற்றுப் பிறந்தவர் இன்று இல்லை, இதுதான் உலகின் பெருமை" என்றார் வள்ளுவர். இதைக் கண்டு அலுத்த மனித உள்ளத்திற்கு ஆறுதல் அளித்தார் கம்பர் "மாய்ந்தவர் மாய்ந் தவர் இல்லை" என்று 'தம்புகழ் நிறிஇத்தாமாய்ந் தனரே'– என்ற புறப்பாட்டை வைத்துத்தான் கம்பர் கூறினார். அது போல இறந்தும் இறவாப் புகழ் பெற்றவர் நம் புலவர்; இருந்து இலக்கிய மணம் எட்டுத் திக்கும் வீசுவன நம் இன்றமிழ் இலக்கியங்கள்.

---


## ஓர் அறிவிப்பு

ஸ்ரீமத் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் திருவரலாறு, இலவசமாக கீழ்க்கண்ட இடத்திற் பெற்றுக்கொள்ளலாம்.

**B. துரைவேலன்,**
'முருகன் அடி'
S. முத்தையா முதலியார் தெரு,
Madras – G. P-O.
**MADRAS-1.**

# ஆறு படை வீட்டின் அருமை நிலை

வித்துவான், திரு. அ. விநாயக மூர்த்தி அவர்கள்,
திருவல்லம்.

## பொது

நோக்கமும் நூலறிவும் நுண்ணுர்வும் வான்பொருளும்
ஆக்கமும் தந்தெம்மை யாண்டிடுவாய் — பூக்கமழும்
மார்புடையாய் நல்ல மயிலுடையாய் அன்பருளச்
சார்புடையாய் சஞ்சலமில் லாய். 1.

## 1. திருப்பரங்குன்றம்

ஆடு மயிலோன் அணிநகர்க ளாங்குரைக்க
நீடு பரங்குன்றம் நின்ருெளிரும் — பாடும்
அருள்வேண்டு மன்பர் அருமையுறு முத்திப்
பொருள்வேண்டு நெஞ்சப் புலம் 2

## 2. திருச் சீரலைவாய்.

கள்ளமுறுஞ் செட்டியாய்க் கான்மரமாய் நிற்கஉன்றன்
உள்ளங் கவர்ந்தா ளுறுப்புநலன் — விள்ளுமோ
காரலைக்குஞ் சீரலைவாய்க் கந்தா உரையென்றன்
காரலைக்கும் வேலாய் கனிந்து. 3.

## 3. திருஆவினன்குடி.

நன்மை வளராவி நன்குடியான் றண்ணருளாற்
புன்மை வளராவிப் பூதலத்தில் — தின்மையிலன்
மென்மயிலன் வன்மையுளன் மேவுமன் பர்க்காக்குந்
தன்மையினன் சாருமயி லன். 4

### 4. திருஏரகம்.

சீரகத்தைத் தந்தருளுஞ் செவ்வேலன் றன்னடியார்
ஏரகத்தைப் பாடிநின் றேத்துவரால் — நீரகத்தின்
மாவாய்க் கிடந்தவனை மாற்றிட்ட மால்மருகா
காவாய்என் றுள்ளங் களித்து. 5.

### 5. குன்றுதோருடல்.

குன்றுதோ ராடுங் குமரன் பதமலர்கள்
நன்றுதேர் வார்க்கு நலம்பெருகும் — மன்றுதனி
னின்ருடு கூத்தர்க்கு நேர்ந்த பொருளுரைத்து
வென்ருடு வேலனரு ளால். 6.

### 6. பழமுதிர்சோலை

உலகத் துயரு முளத்துயரு மெல்லாம்
விலகத் திருநோக்கால் வீப்பாய் — கலகத்துப்
பல்லடிமை நீக்கிப் பழமுதிர்சோ லைத்தலைவா
வெல்லடியேற் சூழ்ந்த வினை. 7.

### வேண்டுதல்

நீறுபட வெவ்வசுரர் நின்ற குமராநின்
ஆறுபடை வீட்டின் அருமைநிலை — கூறுபட
ஓதற்கருள் வைத்த ஓங்கெழிலாய் என்றனுளம்
பாதத்தில் வைக்கப் பணி. 8.

### வாழ்த்து

ஆறுமுகம் வாழ்க அணிமயில்வேல் வாழ்கபுகழ்
கூறு மடியார்க் குலம்வாழ்க — நாறுமலர்
வள்ளிதெய் வானையர் வாழ்கவிந் நானிலத்தே
உள்ளவரும் வாழ்க உவந்து. 9.

---

ஆராய்ச்சிக் கட்டுரை.




மதுரகவி மரபினர்,
திரு. T. N. N. கவிக்குஞ்சரப் பாவலர் அவர்கள்,
மெயின்ரோடு, வாளாடி P. O., திருச்சிராப்பள்ளி.

[மலர் 13, இதழ் 1-ன் தொடர்ச்சி]

## 1. நாட்பொருத்தம்.

நாட்பொருத்தம், உண்டிப்பொருத்தம், கதிப்பொருத்தம், பாற்பொருத்தம், வருணப்பொருத்தம், தானப்பொருத்தம், புட்பொருத்தம், மங்கலச்சொற் பொருத்தம், சீரெழுத்துப் பொருத்தம், சீர்க்கணப் பொருத்தம், பாப்பொருத்தம், கன்னற் பொருத்தம் என்னும் பன்னிரு பொருத்தங்களுள் நாட்பொருத்தத்தை முன்கூறப் புகுந்ததென்னை? யெனின்,

நாட்பொருத்தம் பொருந்தாமல் மற்ற எல்லாப் பொருத்தங்களும் பொருந்தியிருக்கும் பாமாலையானது பாட்டுடைத்தலைவனுக்குத் தீமை பயக்குமாகையானும், நாட்பொருத்தம், அமைத்த பின்னரே ஏனைய பொருத்தங்கள் அமைத்தல் நெறியாகையானும், முன்னர் நாட்பொருத்தம் கூறப்புகுந்தேம்.

பின்வரும் இந்திரகாளியார் வாக்கையும் நோக்குக.

எல்லாக் கணமும் நாணல மிலவெனிற்
பொல்லாங்கு தருமெனப் புகல வேண்டும். —இந்திரகாளியார்.

நாட்பொருத்தம் அமைத்தற்கு (நட்சத்திரப் பொருத்தம் அமைத்தற்கு) நாட்களுக்கு உரிய எழுத்துக்கள் தெரியவேண்டுமாகையான் அவைகளின் விளக்கங்காட்டுதும்.

மொழிக்கு முதலா ஆகிய எழுத்துக்
கோதிய நாள்வகை இயற்றுதல் கடனே. —பன்னிரு பாட்டியல்.

(இதன் பொருள்) பாட்டுடைத் தலைவன் இயற்பெயர் அல்லது சிறப்புப் பெயர் மொழிக்கு முன் உள்ள எழுத்திற்கு ஓதிய (பாட்டியல் நூற்களால் சொல்லிய) நாளினது தரத்தை அறிந்து பாட்டுடைத் தலைவன் மீது பாடும் பாவின் முதற்சீரின் முதல் எழுத்தை அமைத்தல் பாமாலை புனைவோரின் கடமையாம்.

இச்சூத்திரம் 'பாட்டியல் விதி பிறழாது பாமாலை புனைய வேண்டும்' எனக் கட்டளையிடும் பெற்றியை நோக்குக.

## உயிர் எழுத்துக்குரிய நாட்கள்

உயிர்முதல் நான்கும் செயிர்தபு கார்த்திகை
ஐந்தும் மூன்றும் அவற்றின் அடைவே
வந்தபூ ராடம் உத்திரா டம்மே. – பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) உயிரெழுத்துக்கள் பன்னிரண்டனுள், அ, ஆ, இ, ஈ என்னும் முதல் நான்கு உயிரெழுத்துக்களும் கார்த்திகை நாளுக்குரியவை. உ, ஊ, எ, ஏ, ஐ. என்னும் ஐந்து உயிரெழுத்துக்களும் பூராட நாளுக்குரியவை. ஒ, ஓ. ஔ. என்னும் மூன்று உயிரெழுத்துக்களும் உத்திராட நாளுக்குரியவை.

## உயிர்மெய்கட்கு உரிய நாட்கள்

ககர வருக்க வகைநாள் விரிப்பின்
நான்கும் இரண்டும் மூன்றும் மூன்றும்
ஓணம் ஆதிரை புனர்பூசம் பூசம். –பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) க, கா, கி, கீ, கு, கூ, கெ, கே, கை, கொ, கோ, கௌ. என்னும் ககர வருக்கம் பன்னிரண்டனுள் க, கா, கி, கீ என்னும் நான்கு எழுத்துக்களும் திருவோண நாளுக்குரியவை. கு, கூ. என்னும் இரண்டு எழுத்துக்களும், திருவாதிரை நாளுக் குரியவை. கெ, கே, கை. என்னும் மூன்று எழுத்துக்களும் புனர்பூச நாளுக்குரியவை. கொ, கோ, கௌ என்னும் மூன்று எழுத்துக்களும் பூசநாளுக்குரியவை.

சகர நான்கைந் தொருமூன் றிவற்றின்
வகைநாள் இரேவதி முதன்மூன் றென்ப. – பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) சகரவருக்கம் பன்னிரண்டனுள், ச, சா, சி, சீ என்னும் நான்கு எழுத்துக்களும் இரேவதி நாளுக்குரியவை. சு, சூ, செ, சே, சை - என்னும் ஐந்து எழுத்துக்களும் அசுபதி நாளுக்குரியவை. சொ, சோ, சௌ என்னும் மூன்று எழுத்துக்களும் பரணிநாளுக்குரியவை.

ஈண்டு இரேவதி முதன் மூன்றெனப் பகர்ந்தால், இரேவதி, அசுபதி, பரணி, எனக்கொள்ளப்பட்டதென அறிக.

ஞகர வருக்கத் தொருமூன் றவிட்டம்
ஞா ஞெ ஞொ (உ.ம்)-ஞாலம், ஞெகிழி, ஞொள்தல்.
– பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) ஞகர வருக்கத்தில் மொழிக்கு முதற்கண் வருதற்குரிய மூன்று எழுத்துக்களும் அவிட்டநாளுக்குரியவை.

ஞகர வருக்கத்தில் ஞ, ஞா, ஞி, ஞெ, ஞே, ஞோ, என்னும் எழுத்துக்களை மொழிக்கு முதலாக உடைய சொற்கள் பல உள்ளன.

அவை வருமாறு :—

ஞண்டு, ஞமன், ஞமலி, ஞானம், ஞாயிறு, ஞாதுரு ஞாத்தல், ஞாபகம், ஞாயம், ஞாதா, ஞிமிர், ஞிமிறு, ஞெகிழம், ஞெகிழி, ஞெண்டு, ஞெலுவன், ஞேயம், ஞேயா, ஞொள்கல் என்பதாம்.

ஈண்டு இவ்வாறு சொற்கள் இருக்க "ஞகரவருக்கத் தொரு மூன்றவிட்டம்" எனக் கூறியதால், ஞகர வருக்கத்தில் பல எழுத்துக்கள் மொழிக்கு முதற்கண்வரும் தகுதி பெற்றிருப்பினும், அவ்வெழுத்துக்களில் மக்கட்பெயருக்குப் பொருந்துவன மூன்றே யாம் என்பதும், அம்மூன்றெழுத்துக்களும் அவிட்ட நாளுக்குரிய என்பது ஊன்றி நோக்கின் உள்ளங்கை நெல்லி யென உணரலாம்.

வெண்பாப் பாட்டியல் குமாரசுவாமியம் என்னும் நூல்களின் மூலத்தில் ஞகர வருக்கத்தைக் குறிக்கும் பகுதியில் ஒரு மூன்றவிட்டம் என்னும் தொடரே காணப்படுகிறது.

பன்னிரு பாட்டியற்கண் மட்டும் "ஞகர வருக்கத்தொரு மூன்ற விட்டம்" எனும் சூத்திரத்தின் ஈற்றில் 'ஞா, ஞெ, ஞொ' என்றும், அதற்கு உதாரணம், ஞாலம், ஞெகிழி, ஞொள்கல் எனவும், காணப்படுகின்றதென்னை? யெனின், அஃது உரையாசிரியர் தவறேயாமெனக் காட்டுதும்;

ஞொ எனும் எழுத்திற்கு ஞொள்கல் என உதாரணம் காட்டப்பட்டுள்ளது. ஞொள்கல் எனும் சொல்லானது அச்சக் குறிப்பாகவும், அலைதல் எனும் பொருள் தருவதாகவும் உள்ளதால் அச்சொல் மக்கட் பெயராக விளங்கும் தகுதி பெறவில்லை யெனத் தெளிக.

நூலாசிரியர் ஞா, ஞெ, ஞொ, எனும் எழுத்துக்களைக் கூற விரும்பின் ஓரடியிற் கூறவியலும். மற்றும் அவை ஓர் சூத்திரத்தின் ஈற்றடிக்குரிய நிலையும் பெருமை காண்க.

ஞா, ஞெ, என்னும் இரண்டெழுத்துக்களும், மக்கட் பெயர்க்கு முன்வர உரிய என்பதில் எட்டுணையும் ஐயமின்று.

பிறிந்த சகரத்து நான்கைந்து பின்முன்
றறிந்த கலமுதன்மூன் ஞுகுஞ் - செறிந்த
ஞகரத் தொருமூன்று நன்குணர்ந்தோ ராய்ந்த
புகர்தீர் அவிட்டமாம் போற்று.

எனும் வெண்பாப் பாட்டியற் சூத்திரத்திற்கு உரை கண்டார்; ஞகரவருக்கத்தொரு மூன்று 'ஞ, ஞா, ஞெ' எனக்கொண்டார். இவர் உரையே ஏற்புடைத்தாம் எனத் தெளிக. பிறஇருக்கினும் அவை உலகில் மக்கட்பெயராய் விளங்காமை உணர்க.

உதாரணம்: ஞமன், ஞானம், ஞெகிழன் என்ப; எனினும், ஞகரவருக்கத்தில் ஞானம் என்ற சொல்லைத்தவிர பிறசொற்கள் மக்கட்பெயராய் விளங்குவதைக்காண இயலாது. மேற்செல்லுவாம்.

தகர வருக்கத் திரண்டேழ் மூன்றற்கு
வகைநாள் சோதி விசாகம் சதையம். – பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) தகர வருக்கம் பன்னிரண்டனுள், த, தா, என்னும் இரண்டெழுத்துக்களும் சோதி நாளுக்குரியவை. தி, தீ, து, தூ, தெ, தே, தை என்னும் ஏழு எழுத்துக்களும் விசாக நாளுக்குரியவை. தொ, தோ, தௌ என்னும் மூன்று எழுத்துக்களும் சதையநாளுக்குரியவை.

நகரத் தாறும் அனுடத் தடைவே
ஏனை ஆறும் கேட்டைபூ ரட்டாதி. – பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) நகர வருக்கம் பன்னிரண்டனுள் ந, நா, நி, நீ, நு, நூ என்னும் ஆறு எழுத்துக்களும் அனுட நாளுக்குரியவை. நெ, நே, நை என்னும் மூன்று எழுத்துக்களும் கேட்டை நாளுக்குரியவை. நொ, நோ, நௌ, என்னும் மூன்றெழுத்துக்களும் பூரட்டாதி நாளுக்குரியவை.

பத்திய பகரத் தொருநான் கிரண்டா
றுத்தரம் அத்தம் சித்திரை ஆகும். – பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) பகர வருக்கம் பன்னிரண்டனுள் ப, பா, பி, பீ. என்னும் நான்கெழுத்துக்களும் உத்திர நாளுக்குரியவை. பு, பூ, என்னும் இரண்டெழுத்துக்களும் அத்த நாளுக்குரியவை. பெ, பே, பை, பொ, போ, பௌ என்னும் ஆறு எழுத்துக்களும் சித்திரை நாளுக்குரியவை.

மகரத் தாறும் மூன்றும் மூன்றும்
மகமா யிலியம் பூரம் ஆகும். —பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) மகர வருக்கம் பன்னிரண்டனுள் ம, மா, மி, மீ, மு, மூ, என்னும் ஆறு எழுத்துக்களும் மக நாளுக்குரியவை. மெ, மே, மை, என்னும் மூன்று எழுத்துக்களும் ஆயிலிய நாளுக்குரியவை. மொ, மோ, மௌ, என்னும் மூன்று எழுத்துக்களும் பூர நாளுக்குரியவை.

யா வே உத்திரட் டாதி ஏனை
யூ யோ மூலமென் றுணர்ந் திசினேரே. —பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) யகர வருக்கத்துள் மொழிக்கு முதலில் வருதற்கு உரிய யா, யூ, யோ, என்னும் மூன்றெழுத்துக்களுள் 'யா' என்னும் எழுத்து உத்திரட்டாதி நாளுக்குரியதாம். யூ, யோ. என்னும் இரண்டும் மூல நாளுக் குரியவாம்.

ஒருநான் குரோகணி வகரம் அவ்வகை
மற்றை நான்கும் மகசிரம் ஆகும். —பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) வகர வருக்கத்துள் வ, வா, வி, வீ. என்னும் நான்கு எழுத்துக்களும் உரோகணி நாளுக் குரியவை. வெ, வே, வை, வௌ, என்னும் நான்கு எழுத்துக்களும் மிருகசீரிட நாளுக் குரியவை.

யகர வருக்கத்துள் யா, யூ, யோ, தவிர ஏனை எழுத்து கட்கும், வகர வருக்கத்தில் வு, வூ, வொ, வோ, என்னும் நான்கு எழுத்துகட்கும் உரிய நாட்களைக் கூறுதொழிந்த தென்னை? யெனின், அவைகள் மொழிக்கு முதற்கண்வரும் பெற்றியின்றி நிற்பதாலும், அவைகட்குரிய நாட்களைக் கூறின் எட்டுணையும் பயன் இன்மையாலும், கூறுது விட்டனர் எனக் கொள்க.

நாட்கள் கூறுதுவிட்ட பிற எழுத்துகட்கும் இதுவே காரணமாமென்க.

சோதிடப் பெருநூலாகிய குமாரசுவாமியத்திலும், பாட்டிய லிற் கூறியவாறே நாட்களுக்குரிய எழுத்துக்கள் கூறப்படு கின்றன. ஈண்டு விரியுமென்றஞ்சி விடுத்தாம்.

## நாட்பொருத்தம் அமைக்கும் விதம்

மூவகை யாய்ச்செய் தோன்றுமுன் றைந்தேழ்
அட்டம ராசி வைநா சியத்தால்
விட்டனர் பின்னர் மேவினர் கொளலே. —பன்னிரு பாட்டியல்.

(இ-பொ) இருபத்தேழு நாட்களையும், பாட்டுடைத் தலைவன் இயற்பெயரின் முதலெழுத்துக்குரிய நாள் தொடங்கி, அல்லது அவன் பிறந்தநாள் (சென்ம நட்சத்திரம்) தொடங்கி ஒன்பது ஒன்பதாக மூன்று கூறுகளாக்கி அம்மூன்று கூறுகளிலும் உள்ள முதல் நாளும், மூன்ரும் நாளும், ஐந்தாம் நாளும், ஏழாம் நாளும், பாட்டுடைத் தலைவன் இயற்பெயர்க்குரிய நாளுக்கு அல்லது அவன் பிறந்த நாளுக்குரிய இராசிக்கு எட்டாம் இராசிக்கண் நின்ற நாட்களும், 'வைநாசிகம்' என்னும் இரு பத்திரண்டாம் நாளும், 'வைநாசிகக்கால்' என்னும் 88-ஆம் கால் நின்ற நாளும் பொருந்தாது என நீக்கினர்.

அதாவது, அந்நாட்களுக்குரிய எழுத்துக்கள் முதற் பாட்டின் முதற்சீரின் முன்எழுத்தாக அமைத்தல் பொருந்தாமை கண்டு நீக்கினர் எனக்கொள்க.

அம்மூன்று கூறுகளிலும் உள்ள (அட்டமம், வைநாசிகம் வாராத) இரண்டாவதுநாளும், நான்காவது நாளும், ஆருவது நாளும், எட்டாவது நாளும், ஒன்பதாவது நாளும், விரும்பினர். இந்நாட்களுக்குரிய எழுத்துக்களில் ஒன்றை முதற் பாட்டின் முதற்சீரின் முன் எழுத்தாக அமைத்தல் நலமென நாட்டினர் என்றுணர்க.

(வளரும்)

---

"ஞானசம்பந்தம்"

அரிய கட்டுரைகளுடன் வெளிவரும் திங்கள் வெளியீடு

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்திலிருந்து வெளி வருகிறது. சமயப்பொருள் முதலியவை குறித்த தெளிவான கட்டுரைகள் அடங்கியது. சைவ சமயத்தின் உண்மைகளை உணர் வதற்குப் பெருந்துணையானது. சந்தாத் தொகையைக்கீழ்க் கண்ட முகவரிக்கே அனுப்பிவைக்கவும்.

ஆண்டுக் கையொப்பம்,

உள்நாடு ரூ. 2 – 25 * வெளிநாடு ரூ. 3 – 00

செயலாளர். "ஞானசம்பந்தம்" அச்சகம்.

தருமபுரம், மாயூரம் P. O.

# திருவதிகை வீரட்டேசுவரர்
# மகாசிவராத்திரிக் கட்டளை நிதி ரூ. 1000/-



திருநெறிய மெய்ஞ்ஞானத் தமிழ் மூவராலும் பாடப் பெற்றதும்,

'பூமன் சிரங்கனடி, அந்தகன் கோவல், புரம்அதிகை,
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மாவழுவூர்,
காமன் குறுக்கை, யமன்கடவூர், இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையும் திங்களுஞ் சூடிதன் சேவகமே'

என்றவாறு திரிபுரமெரித்த வீரட்டானமாயதும்,

'தவலரும் புரங்கள் முன்றும் தழனுதல் திருக்கண் சாத்திப்
பவமறு மூவ ரன்பிற் பட்டவன் பதியைக் காண்மின்'

என்று திருவிளையாடற்புராணத்து ஓதப் பெற்றதும்,

எல்லாத் தலங்களிலும் அதிகமானதால் அதிகை எனப்பெற்றதும், 'தென்றிசைக் கங்கையதெனப்படும் கெடிலம்' எனப் பெற்ற கெடில வடகரையில் திருக்கோயில் அமைந்ததும்,

'அதியரைய மங்கை அமர்ந்தான்தன்னை' என்று அப்பர் சுவாமிகளால் அதியரைய மங்கை என்று குறிக்கப்பெற்றதும்,

'புலர்வதன்முன் திருவலகு பணிமாறிப் புனிறகன்ற
நலமலிஆன் சாணத்தால் நன்குதிரு மெழுக்கிட்டு
மலர்கொய்து கொடுவந்து மாலைகளும் தொடுத்தமைத்துப்
பலர்புகழும் பண்பினுல்'

திலகவதியார் திருப்பணிகள் பல செய்த தலமாயதும்,

திலகவதியாரது தம்பியார் ஆகிய மருணீக்கியார் சமண சமயத் தொடக்கினையறுத்து, வீரட்டேசுவரரைப் பணிந்து, 'கூற்றுயினவாறு விலக்ககிலீர்' என்ற பதிகம்பாடிச் சூலைநோய் நீங்கப் பெற்று,

'பாவுற் றலர்செந் தமிழின் சொல்வளப்
பதிகத் தொடைபா டியபான் மையினால்
நாவுக்கரசென் றுலகே ழிலும்நின்
நன்னா மம்நயப் புறநண் ணுக'

என்று இறைவனால் திருநாவுக்கரசு என்று பெயர் அளிக்கப் பெற்ற பதியாயதும்,

சமணர் மொழி பொய் யென்றுணர்ந்த மகேந்திரவர்மன் எனும் பல்லவ அரசன், சைவசமயஞ் சார்ந்து, பாடலிபுரத்திலிருந்த சமணப்பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துக்கொணர்ந்து குணபரவீச்சரம் எனும் கோயில் கட்டிய தலமாயதும்,

'உடையவர சுலகேத்தும் உழவாரப் படையாளி
விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்
தடையுமதற் கஞ்சுவன்'.

என்று கூறிச் சுந்தரர் மிதித்தற்கும் அஞ்சிய தலமாகிய சிறப்புடையதும் ஆன திருவதிகை என்னும் திருத்தலத்தில் மாசி மாசத்தில் வரும் மகாசிவராத்திரி யன்று ஒரு காலத்தில் மட்டும் விசேஷ அபிஷேக நைவேத்தியங்கள் நடத்துவித்தற் பொருட்டு, இத்தருமம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப் பெற்றது. இது 'திருவதிகை வீரட்டேசுவரர் மகாசிவராத்திரிக் கட்டளை நிதி' எனப்பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 1000/- /ரூபா ஆயிரம்/. இது ஆண்டொன்றுக்கு 3% வட்டி தரக்கூடிய அரசியல் கடன் தாள்களில் முதலீடு செய்யப் பெற்றுள்ளது. 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946, சர்க்கார் கடன் பத்திரம் எண் சிஏ. 228318; ரூ. 1000/-. இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப் பெற்று வரும்.

3. இம் முதற்பொருளினின்று கிடைக்கும் வட்டித் தொகை முழுதும் திருவதிகையில் சிவாலயத்தில் வீரட்டேசுவரருக்கு ஆண்டுதோறும் மாசிமகா சிவராத்திரியன்று ஒரு யாமத்தில்

மட்டும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடத்துவிக்கப் பயன் படுத்தப் பெறும்.

4. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலும் பயன் படுத்தப் பெறமாட்டாது.

5. இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப் பின் உரிமை உள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும். இம்முதற்பொருள் திரும்பியளிக்கப்பெறின் அதிக வட்டி தரக்கூடிய அரசியல் கடன் தாள்களில் முதலீடு செய்யப்பெறும்.

எல்லாம் சிவனென்ன நின்ருய் போற்றி
வீரட்டம் காதல் விமலா போற்றி.

திருப்பனந்தாள், 29-1-1962. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 31-1-1962 as No. 5 of 1962 of Book No. 4, volume 49 pages 297 to 299.



## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 9203 | The Journal of the Tanjore Saraswathi Mahal Library. | S. Gopalan, B.A., B.L., Hon. Secretary, T. M. S. S. M. Library, Tanjore. |
| 9204 | 1008வது வெளியீட்டு விழா மலர். | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். |
| 9205 | அக்கமாதேவி வரலாறு. | சிவாயம்குரு. ஆ. கந்தசாமி ஐயா, சங்கமுகவர் வரகநகர், திருச்சி. |
| 9206 | திருக்காணுட்டு முள்ளூர்த் திருப்பதிகம். | தருமபுர ஆதீனம். |
| 9207 | திருப்பாசூர்த் திருப்பதிகம். | ,, |
| 9208 | உண்மை விளக்கம் (உரையுடன்). | ,, |
| 9209 | ஆபதுத்தாரணர் மாலை. | ,, |
| 9210 | அறிவுவிளக்கம் | சி. வெள்ளைச்சாமி, காட்டுநாயக்கன்பட்டி, திருவள்ளுவர் ஜீவகாருண்ய சங்கம், நெல்லை ஜில்லா. |
| 9211 | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம், திருமால்போற்றித் திருவகவல். | திரு. கி. பக்ஷிராஜன், வழக்குரைஞர், சன்னதி தெரு, வீரராகவபுரம், திருநெல்வேலி. |
| 9212 | Digest of central Acts (April, June 1961) Vol. VI. | Lok Sabha Secretariat, New Delhi. |

| | | |
|---|---|---|
| 9213 | The Journal of the Tanjore Sarasvathi Mahal Library. | S. Gopalan, B.A., B.L., Hon. Secretary, T. M. S. S. M. Library, Tanjore. |
| 9214 | மாணிக்கவாசக சுவாமிகள் வரலாறு, பன்னிருதிரு முறை பவனி வருதல் (மூன்ரும் பதிப்பு) | கருப்பண முதலியார், ஸ்டோர்ஸ், 53-கிடங்குத் தெரு, சென்னை-1 |
| 9215 & 16 | Gems of wisdom. | By Swami Sivananda. |
| 9217 | திரு எம்பாவை திருப்பள்ளி எழுச்சி என்னும் அருட் பாமாலை, மணிமாலை–சிறுசுடர், உரையும் பதவுரையும். | ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் வேதாந்தமடம், திருப்பூவணம். |
| 9218 & 19 | Gita Meditations. | By Swami Sivananda. |
| 9220 | The Cosmic Rays (Shree Swami Sivananda's letters to Sri Swami Sivananda Durganand). | Sri Swami Sivananda Durganand. |
| 9221 | How to live 100 years. | By Swami Sivananda. |
| 9222 | Practice of Bhakthi Yoga. | " |
| 9223 | Natiya Sastra Sangraha vol. II. | T. M. S. S. M. Library, Tanjore. |
| 9224 | கலைக்களஞ்சியம் (தொகுதி எட்டு). | தமிழ்வளர்ச்சிக் கழகம், சென்னை. |
| 9225 | The Sivananda Literature vol. II. | By Swami Omkayrananda. |
| 9226 | நினைத்த கதை முடித்த விநாயகப் பிள்ளையார் வளாகத்தலபுராணம். | கவிராசபண்டித. இராம. சுப்பிரமணிய நாவலர். |
| 9227 | மரணத்திற்குப் பின் ஜிவன்? | சுவாமி சிவானந்தா. |
| 9228 | மெய்யறிவு விளக்கம். | ஆ. து. சுந்தரம், திருவேள்விக்குடி. |

[தொடரும்]

திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

# ‘ திருமுறை வெளியீடுகள் ’



| | | ரூ. ந. பை |
|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) (புதிய பதிப்பு) ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, ... | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) ,, ... | 1 30 |
| 7* | திருவாசகம் (அச்சில்) | |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) ... | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை ,, ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, ... | 2 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, ... | 2 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் ,, ... | 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் ,, ... | 1 00 |
| | ஷெ 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் ... | 4 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.
Regd No. M. 5574 

| | | | |
|---|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை - மதுரை மீனாட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை - தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... | 0 50 |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... | 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 56 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோயில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '62.